# அருள்

பெரியோரைத் துணைக்கொள்

6/71







ஸ்ரீவித்யா வாசஸ்பதி
பிரம்மஸ்ரீ C. V. ஸ்வாமி சாஸ்திரிகள்





தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 5 ] விரோதிகிருது ஆவணி (17-8-71) [கருணை 11

## விநாயக சதுர்த்தி

இம்மாதம் (அதாவது, ஆவணிமாதம்) எட்டாந்தேதி (24-8-71) செவ்வாய்க்கிழமையன்று, விநாயக சதுர்த்தி வருகிறது.

அன்றையதினம், களிமண்ணினாலான ஸ்ரீ மஹாகணபதியின் திருவுருவத்தில் அந்தப் பெருமானை ஆவாஹனம் பண்ணி, ஷோடச உபசாரங்களுடன் பூஜிக்கவேண்டும்.

முக்கியமாக, பூர்ணம் வைத்த மோதகம், நாவல்பழம், இவற்றை நிவேதனம் செய்யவேண்டும். அறுகம் புல்லால் மாலை கட்டிச் சாத்தவேண்டும். இரண்டிரண்டு அறுகம் புற்களால் அர்ச்சனை செய்வது மிகவும் சிறந்தது.

அவ்வாறு செய்யும் பக்தர்களுக்கு, எல்லா விக்னங்களையும் போக்கி, எம்பெருமான் இனிதான நல்வாழ்வு அருள்வான்.

நம் "அருள்" அன்பர்கள் அனைவருக்கும், ஸ்ரீ கணேசப் பெருமானது திருவருள் சித்திக்குமாறு, அவனுடைய திருத்தாள்களை வணங்குகிறோம்.

— ஆசிரியர்

| ஆண்டுச் சந்தா | ஆயுள் சந்தா | தனிப் பிரதி |
|---|---|---|
| ரூ. 6-00 | ரூ. 100 | 50 காசு |

சந்தா அனுப்ப வேண்டிய முகவரி: நிர்வாகி, "அருள்"
4, தணிகாசலம் செட்டி தெரு, தியாகராய நகர், சென்னை-17.

ஔவையார் அருளிச் செய்த

# ஸ்ரீ விநாயகர் அகவல்

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலஇசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகில் ஆடையும்
வன்ன மருங்கில் வளர்ந்தழ(கு) எறிப்பப்

பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சு கரமும் அங்குச பாசமும்
நெஞ்சில் குடிகொண்ட நீல மேனியும்
நான்ற வாயும் நாலிரு புயமும்

மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்குபொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழ்ஒளி மார்பும்
சொற்பதம் கடந்த துரியமெய்ஞ் ஞான
அற்புதம் நின்ற கற்பகக் களிறே

முப்பழம் நுகரும் மூஷிக வாகன!
இப்பொழு(து) என்னை ஆட்கொள வேண்டித்
தாயாய் எனக்குத் தானெழுந்(து) அருளி
மாயாப் பிறவி மயக்கம் அறுத்துத்
திருந்திய முதல்ஐந் தெழுத்தும் தெளிவாய்ப்

பொருந்தவே வந்தென் உளந்தனில் புகுந்து
குருவடி வாகிக் குவலயந் தன்னில்
திருவடி வைத்துத் திறம்இது பொருள்என
வாடா வகைதான் மகிழ்ந்தெனக் கருளிக்
கோடா யுதத்தால் கொடுவினை களைந்தே

உவட்டா உபதேசம் புகட்டிஎன் செவியில்
தெவிட்டாத ஞானத் தெளிவையும் காட்டி
ஐம்புலன் தன்னை அடக்கும் உபாயம்
இன்புறு கருணையின் இனிதெனக் கருளிக்
கருவிகள் ஒடுங்கும் கருத்தினை அறிவித்(து)

இருவினை தன்னை அறுத்திருள் கடிந்து
தலமொரு நான்கும் தந்தெனக் கருளி

மலமொரு மூன்றின் மயக்கம் அறுத்தே
ஒன்பது வாயில் ஒருமந் திரத்தால்
ஐம்புலக் கதவை அடைப்பதுங் காட்டி

ஆறு தாரத்(து) அங்குச நிலையும்
பேறு நிறுத்திப் பேச்சுரை அறுத்தே
இடைபிங் கலையின் எழுத்தறி வித்துக்
கடையில் சுழுமுனைக் கபாலமும் காட்டி
மூன்றுமண் டலத்தின் முட்டிய தூணின்

நான்றெழு பாம்பின் நாவில் உணர்த்திக்
குண்டலி அதனில் கூடிய அசபை
விண்டெழு மந்திரம் வெளிப்பட உரைத்து
மூலா தாரத்து மூண்டெழு கனலைக்
காலால் எழுப்பும் கருத்தறி வித்தே

அமுத நிலையும் ஆதித்தன் இயக்கமும்
குமுத சகாயன் குணத்தையும் கூறி
இடச்சக் கரத்தின் ஈரெட்டு நிலையும்
உடற்சக் கரத்தின் உறுப்பையும் காட்டிச்
சண்முக தூலமும் சதுர்முக சூக்கமும்

எண்முக மாக இனிதெனக்(கு) அருளிப்
புரியட்ட காயம் புலப்பட எனக்குத்
தெரிஎட்டு நிலையும் தெரிசனப் படுத்தி
கருத்தினிற் கபால வாயில் காட்டி
இருத்தி முத்தி இனிதெனக்(கு) அருளி

என்னை அறிவித்(து) எனக்கருள் செய்து
முன்னை வினையின் முதலைக் களைந்து
வாக்கும் மனமும் இல்லா மனோலயம்
தேக்கியே என்றன் சிந்தை தெளிவித்(து)
இருள்வெளி இரண்டுக்கும் ஒன்றிடம் என்ன

அருள்தரும் ஆனந்தத்(து) அழுத்திஎன் செவியில்
எல்லை இல்லா ஆனந்தம் அளித்(து)
அல்லல் களைந்தே அருள்வழி காட்டிச்
சத்தத்தின் உள்ளே சதாசிவம் காட்டிச்
சித்தத்தின் உள்ளே சிவலிங்கம் காட்டி

அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்(கு) அப்பாலாய்க்
கணுமுற்றி நின்ற கரும்புளே காட்டி
வேடமும் நீறும் விளங்க நிறுத்திக்
கூடுமெய்த் தொண்டர் குழாத்துடன் கூட்டி
அஞ்சக் கரத்தின் அரும்பொருள் தன்னை

நெஞ்சக் கருத்தின் நிலையறி வித்துத்
தத்துவ நிலையைத் தந்தெனை ஆண்ட
வித்தக விநாயக! விரைகழல் சரணே!

---

# ஸ்ரீ வித்யா வாசஸ்பதி
# பிரம்மஸ்ரீ C.V. ஸ்வாமி சாஸ்திரிகள்

## வேலவன்

சேரநாட்டிலே, சுமார் எழுபது எண்பது ஆண்டுகளுக்கு முன்பு, ஒரு சிற்றரசர் வாழ்ந்து வந்தார்.

அந்தச் சிற்றரசரிடம் பணியாற்றி வந்தார் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஐயர் என்னும் ஒருபெரியவர்.

அங்கு ஒரு பகவதி கோயில் இருந்தது. கோயிலுக்கு முன்னால் ஒரு பாறை. அந்தப் பாறையின் மீது, மயூர சதகம் என்னும் ஸ்தோத்ரத்தைப் படனம் செய்தவாறு, நாள் தவறாமல் சூர்ய நமஸ்காரம் பண்ணி வந்தார் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஐயர்.

அதன் விளைவாக, அவருடைய நெற்றி, தோள்கள், மார்பு, முழங்கால்கள் ஆகிய இடங்களில் நிரந்தரமான காய்ப்புகள் ஏற்பட்டு விட்டன. அதுமட்டும் அல்ல. அந்த அங்கங்கள் படிந்த இடங்களில், பாறுங்கல்லிலே ஓர் அங்குல ஆழத்துக்குக் குழிகள் விழுந்துவிட்டன. அந்தக் குழிகளை நாம் இன்றைக்கும் பார்க்கலாம்!

அந்த ஊரிலுள்ளவர்கள் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஐயரைக் 'கலியுக ஹரிச்சந்திரன்' என்று பாராட்டினார்கள். அந்த அளவுக்கு அவர் உத்தமமான பண்புகள் படைத்தவராய் விளங்கி வந்தார். அவரது இரண்டாவது குமாரர்தான் இவ்விதழின் முகப்பு அட்டையில் காட்சியளிக்கின்ற ஸ்ரீ வித்யா வாசஸ்பதி பிரம்மஸ்ரீ C.V. ஸ்வாமி சாஸ்திரிகள் என்ற வேங்கடேஸ்வர சாஸ்திரிகள்.

சாஸ்திரிகளின் தந்தையும், அவருக்கு முந்தின சில தலைமுறையினரும் மலையாளத்தில் வாழ்ந்து வந்தார்கள் எனினும், அவர்களது பூர்வீகம் தமிழ் நாடே ஆகும். ஒரு காலத்தில் தமிழ் நாட்டின் வட எல்லையாக இருந்த திருப்பதியே அவர்களது சொந்த ஊர். திருப்பதியில் கோயில் கொண்டிருக்கும் வேங்டேஸ்வரப் பெருமானே அவர்களது குலதெய்வம். ஏழெட்டுத் தலைமுறைகளுக்கு முன்னாலிருந்து இந்நாள்வரை, அவர்களுடைய குடும்பங்களில் தோன்றிய ஆண்களில் பெரும்பாலோர் "வேங்கடேஸ்வரன்" என்ற பெயர் கொண்டவர்களாயிருப்பதே, அதற்குச் சான்றாகும்.

ஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகள் தம்முடைய நாலாவது வயதிலேயே

தந்தையை இழந்தவர். சந்திர சேகரபுரம் என்னும் ஊரில் இவரது தாய்மாமன்மார் ஹரி ஹரய்யர், கிருஷ்ண ஜோஸ்யர், மஹாதேவஜடாவல்லபர் என மூவர் இருந்தனர். அவர்கள் தாம் இவரை வளர்த்தவர்கள்.

அந்த மஹாதேவஜடாவல்லப ரிடத்திலும், தமது சிறிய பாட்டி யின் கணவரான நரசிம்மஜடா வல்லபரிடத்திலும், ஸ்ரீ சாஸ்திரி கள் வேத அத்யயனம் செய்தார். சந்திரசேகரபுரத்திலுள்ள ஸ்ரீ முத்து சாஸ்திரிகளிடத்தில் காவ்யம் கற்ருர். மாமா கிருஷ்ண ஜோஸ்யரிடம் ஜோஸ்யம் பயின்ருர். இவற்றுடன், பல்வேறு சாஸ்திரங்களிலும் சங்கீதத்திலும் இவருக்குச் சிறப்பான தேர்ச்சி ஏற்பட்டது.

சாஸ்திரிகள் தம் இருபதாம் வயதை எய்தியபோது, அவருக்கு மிகவும் ஆதரவாயிருந்த மாமா கிருஷ்ண ஜோஸ்யர் காலமாகி விட்டார். எனவே, அதற்குமேல் சந்திரசேகரபுரத்தில் இருக்க மனம் இல்லாமல், அவர் சென்னை வந்து சேர்ந்தார்.

சென்னையிலே, அவருக்கு ஒரு பெறற்கரிய பெரும்பாக்கியம் கிடைத்தது.

அதாவது,—

அந்நாளிலே, திருவட்டீஸ்வரன் பேட்டை மத்யமப் பாடசாலை யிலே, பழவந்தாங்கல் பிரம்மஸ்ரீ ந. சுப்ரமண்ய ஐயர் என்னும் பெரியார் ஒருவர் தலைமை ஆசிரிய ராகப் பணிபுரிந்து வந்தார். உலகினர் பார்வையில் ஒரு சாதாரண கிருஹஸ்தர்போலக் காட்சியளித்தாலும், உள்ளூற அவர் ஒரு மஹாத்மாவாக விளங்கி வந்தவர். நம் பாரத நாட்டிலேயே மிகவும் புராதன மான ஒரு ஸ்ரீவித்யா பரம்பரை யைச் சேர்ந்தவர். பிரயாகை க்ஷேத்திரத்தில், ஸ்ரீ குஹானந்தர் என்னும் அவதூத மஹாப்ரபு விடம் ஸ்ரீ வித்யாதீட்சை பெற்ற வர். சிதானந்தர் என்னும் தீக்ஷா நாமம் பூண்டவர். வேதோக்த மான ஸ்ரீவித்யாசம்பிரதாயத்தை உத்தம அதிகாரிகளிடையே பரப்பி வளர்ப்பதற்கான ஆக்ஞை யும் அனுக்ஞையும் தம் குருநாத ரிடமிருந்து பெற்றவர். அதன் படியே, தம் குருநாதரின் பெய ரால் "ஸ்ரீ குஹானந்த மண்டலி" என்னும் ஒரு ஸ்ரீ வித்யா மண்டலி யை ஸ்தாபித்து, மிகவும் அபூர் வமான பல கிரந்தங்களை வெளி யிட்டு, ஸ்ரீ வித்யையே பிரம்ம வித்யையென்று நிர்த்தாரணம் செய்து, நேபாளம் முதல் கன்யா குமரி வரையில் புகழ் ஒளிவீச விளங்கியவர். ஆயிரக்கணக்கான சத்சிஷ்யர்களைப் பெற்றவர்.

அந்த மஹானை சந்திக்கும்பேறு டாக்டர் அனந்தய்யர் என்னும் பெரியவரின்மூலம், ஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகளுக்குக் கிடைத்தது. அதன் பிறகு, அவரது வாழ்க்கை யிலும் ஒரு மாபெரும் மாறுதல் ஏற்பட்டது.

1936'ம் வருஷம் ஜூலை மாதத்தில், பௌர்ணமி புண்யதினத்தில் ஜகன்மாதா ஸ்ரீ காஞ்சி காமாக்ஷி அம்பிகையின் ஸன்னிதியில், சாஸ்திரிகளுக்கு ஸ்ரீ சிதானந்த நாதரிடமிருந்து ஸ்ரீ வித்யா தீக்ஷை கிடைத்தது. அப்போது அவருக்கு வயது முப்பத்தாறு.

தீக்ஷைபெற்ற பிறகு, ஸ்ரீ குரு நாதரையே பரதேவதையாக பாவித்து, அவரது நிழல்போலவே பல்லாண்டு காலம் அருகிருந்து தொண்டு செய்து, அவருடைய திருவருளுக்குப் பரிபூர்ணமான பாத்ரமானுர் சாஸ்திரிகள். அதன் விளைவாக, ஸ்ரீ வித்யா மந்திர சாஸ்திரங்களிலும் சம்பிரதாயங்களிலும், எவரும் வியக்கத் தக்க ஆற்றலும் அனுபவமும் பெற்றுர். தந்திர சாஸ்திரங்களில் பேசப்படுகிற பல அரிய விஷயங்களை வேதாந்தபரமாக அர்த்தம் செய்து அனுபவிக்கின்ற உயர் தகுதியையும் அடைந்தார்.

வடமொழியில் ஸ்ரீ சாஸ்திரிகள் ஓர் அற்புதமான கவிதாசக்தி படைத்தவர். ஆயிரக்கணக்கான சுலோகங்களை அனுயாசமாக இயற்றக் கூடியவர். ஸ்ரீ வித்யா கதியம், ஸுப்ரஹ்மண்ய கத்யம் போன்ற அநேக ஸ்தோத்ரங்களும், பல சுப்ரபாதங்களும், ஸ்ரீ மஹா கணபதி ஸபர்யா பத்ததி, ஸுப்ரஹ்மண்ய த்ரிசதி போன்ற பல அரிய கிரந்தங்களும் இவர் ஆக்கியுள்ளார். தமது குரு நாதராகிய ஸ்ரீசிதானந்தநாதரின் திவ்ய சரித்ரத்தை. 'ஸ்ரீசிதானந்த விலாசம்' என்னும் பெயரால் தமிழில் எழுதியுள்ளார். இதற்கு முன் தமிழில் வெளி வந்திராத 'த்ரிபுரா ரஹஸ்யம்' மாஹாத்ம்ய கண்டத்தை, இவர் முதன் முதலாகத் தமிழில் மொழி பெயர்த்துள்ளார். இவற்றைத் தவிர, ஆஸ்திக தர்மத்தைப் பரப்புவதற்கென்றே வெளியிடப்படுகிற பல பத்திரிகைகளில், இவர் ஏராளமான கட்டுரைகள் எழுதியுள்ளார்.

முக்கியமாக, வரருசி பகவானுல் முதன் முதலில் கையாளப்பட்ட கடபயாதி என்னும் கணக்கு முறையைப் பயன்படுத்தி, மந்திர சாஸ்திரங்களிலும் உபாசனுக் கிரமங்களிலும் பொதிந்துள்ள பல நுண் பொருள்களை இவர் வெளிப் படுத்தியிருப்பது, ஒரு வியக்கத் தக்க சாதனையாகும். அந்த முறையில், "61'ல் 71", "60'ம் 68ம்" என்பனபோன்ற தலைப்புக்களில், சிறு சிறு புஸ்தகங்கள் பலவற்றை வெளியிட்டுள்ளார்.

ஆழமான தத்துவார்த்தங்களைக் கொண்ட அந்தப் புஸ்தகங்கள், படிப்பதற்கு மிகவும் சுவையாக இருக்கும்.

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடத்தின் 68வது பீடாதிபதிகளாக இப்போது அருள் ஒளி பரப்பிக் கொண்டிருக்கிற ஸ்ரீ ஆசார்ய ஸ்வாமிகளும், 69வது பீடாதிபதியாய் இளையபட்டம் ஏற்றிருக்கும் புதுப்பெரியவாள் அவர்களும், தம் அனுக்ரஹ ரூபமான தோடாவும் சால்வையும் சாஸ்திரிகளுக்கு வழங்கியுள்ளனர்.

பூரி கோவர்த்தன பீடத்தைச் சேர்ந்த ஸ்ரீ சங்கராச்சார்ய ஸ்வாமிகள், "ஸ்ரீ வித்யா மார்த்தாண்ட" என்னும் பட்டத்தை நமது சாஸ்திரிகளுக்கு அருளியுள்ளார்கள்.

துவாரகா பீடாதிபதி ஸ்ரீ அபிநவஸச்சிதானந்த தீர்த்தர் என்னும் ஆச்சார்ய ஸ்வாமிகள், சாஸ்திரிகளுக்கு "ஸ்ரீ வித்யா வாசஸ்பதி" என்னும் விருதை அளித்துள்ளார்கள்.

ஸ்ரீ சிருங்கேரி ஆச்சார்ய ஸ்வாமிகளும் சாஸ்திரிகளுக்கு சால்வைபோர்த்தி அனுக்ரகித்துள்ளார்கள்.

பிரயாகையிலிருந்து வெளி வருகிற "சண்டீ" என்னும் ஸம்ஸ்கிருதபப்பத்திரிகை, சாஸ்திகளின் ஸ்ரீ வித்யா பாண்டித்யத்தைப் பாராட்டி ஒரு கட்டுரை வெளியிட்டுள்ளது. சாஸ்திரிகளின் ஸம்ஸ்கிருதக் கட்டுரைகள், பல வட நாட்டுப் பத்திரிகைகளில் வெளிவந்துள்ளன.

வடநாட்டிலும் தென்னாட்டிலுமுள்ள ஸ்ரீவித்யா உபாஸகர்கள் பண்டிதர்கள் ஆகியோரின் உயர் மதிப்புக்கு உரியவராய் விளங்குபவர் நமது சாஸ்திரிகள். அவர் செய்திருக்கும் சண்டியாகங்கள் எண்ணில் அடங்கா. தம் குருநாதரின் ஆக்ஞையுடன், மதுரையிலும் கள்ளிக்கோட்டையிலும் அவர் ஸ்ரீ சக்ர பிரதிஷ்டை செய்தவர். திருவண்ணாமலை ஸ்ரீ ரமணாச்ரமத்தில், மேருப் பிரதிஷ்டை செய்தவர். வட தேசத்திலும் தென் தேசத்திலும் ஏராளமான சிஷ்யர்களைப் பெற்றவர்.

இத்தகைய பெருஞ்சிறப்புக்களிருந்தும், எல்லோரிடமும் மிக இனிமையாகவும் எளிமையாகவும் பழகும் இயல்பு வாய்ந்தவர் ஸ்ரீ ஸ்வாமி சாஸ்திரிகள். அவருக்கு இப்போது 71 வயது ஆகிறது. அவர் இன்னும் பன்னெடுங்காலம் பாரிமிசை வாழ்ந்து, உத்தமமான ஸ்ரீவித்யா சம்பிரதாயத்தை வளர்த்து வருவதற்கு இன்னருள் புரியுமாறு, நாம் ஸ்ரீ பரதேவதையை பிரார்த்திப்போமாக! ●

# ஸந்தியா வந்தனம்



ஜகத்குரு
ஸ்ரீ காமகோடி ஆச்சார்ய
ஸ்வாமிகள்

ஸந்தியா வந்தனத்தில், அர்க்கியமும் காயத்ரீயும் முக்கியமானவை. மற்றவைகளெல்லாம் அதற்கு அங்கமானவை.

அசக்தர்களாயிருப்பவர்கள், அர்க்கியத்தைக் கொடுத்து விட்டுப் பத்து காயத்ரீகளையாவது செய்யவேண்டும்.

''அந்த இரண்டுதானே முக்கியம்? அவைகளை மட்டும் செய்து விடலாம்!'' என்றால், வரவர அவைகளுக்கும் லோபம் வந்து விடும். ஆசையால், அங்கபுஷ்களத்தோடு செய்து வந்தால் முக்கியமானது நிற்கும்.

ஆபத் காலத்திலுங்கூட, இவைகளைச் செய்து வரவேண்டும். காலத்திலும் செய்யவேண்டும். பாரத யுத்தத்தில் ஜலம் அகப்படாமல், தூளியை வைத்துக் கொண்டு காலம் தவறாமல் அர்க்கியம் கொடுத்தார்களென்று சொல்லப்பட்டிருக்கிறது.

அஸ்தமன காலத்திலும், உதய காலத்துக்கு முன்பும், உச்சிக் காலத்திலும் அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

இடைக் காட்டுச் சித்தர் என்று ஒருவர் இருந்தார். அவர் ஆடு மேய்த்தார். அவர், ''காணாமற் கோணாமற் கண்டு கொடு! ஆடு காண் போகுது பார் போகுது பார்!'' என்று சொல்லி இருக்கிறார்.

''காணாமல்'' என்றால், ஸூரியனைக் காண்பதற்கு முன்பு என்பது அர்த்தம். அதாவது, ஸூரி

யோதயத்திற்கு முன் காலை அர்க்கியம் கொடுக்க வேண்டும்.

"கோணுமல்" என்பதற்கு, தலைக்கு நேரே இருக்கும்பொழுது என்று அர்த்தம். அதாவது, ஸூரியன் மேற்கே போவதற்கு முன், உச்சி காலத்தில் மாத்யான்னிக அர்க்கியம் கொடுக்கவேண்டும்.

"கண்டு" என்பதற்கு, ஸூரியன் இருக்கும் பொழுது என்று அர்த்தம். ஸூரியன் அஸ்தமிப்பதற்கு முன்பு, மலைவாயில் இருக்கும்போது, ஸாயங்கால அர்க்கியம் கொடுக்கவேண்டும். இந்த விஷயங்களைத்தான் இலேசாகச் சொல்லியிருக்கிறுர்.

"ஆடு" என்ருல், "நீராடு; கங்கையில் ஸ்நானம் பண்ணு" என்பது அர்த்தம். "காண்" என்ருல் ஸேது தரிசனம் பண்ணு என்பது அர்த்தம் "போகுது" என்ருல், "கங்கா ஸ்நானத்தாலும் ஸேது தரிசனத்தாலும் நம் பாபம், தொலைகிறது" என்பது பொருள்.

காயத்ரீயைச் சரியாகப் பண்ணிஞல்தான், வேத மந்திர ஸித்தி உண்டாகும். அர்க்கியத்தையும் காயத்ரீயையும் தவருமல் செய்து கொண்டு வரவேண்டும்.

ஜன்மத்தில் ஒரு தரமாவது கங்கா ஸ்நானம், ஸேது தரிசனம் பண்ண வேணும். ஸந்தியாவந்தனத்தைத் தவருமல் செய்துவர வேண்டும். அங்க புஷ்களமாகப் பண்ணிஞல்தான் பிரதானமாவது நன்ருக இருக்கும்.

ஜ்வரம் வந்தால், கூட இருக்கிறவர்கள் அவர்களுக்காக ஸந்தியா வந்தனம் பண்ணி, தீர்த்தத்தை ஜ்வரம் வந்தவர் வாயில் விட வேண்டும். இப்பொழுது நமக்கு நித்தியப்படி ஜ்வரம் வந்தது போலத்தான் இருக்கிறது.

ஜ்வரம் வந்தால், அதற்கு மருந்து அவசியம்; அதுபோல, ஆத்மாவுக்கு உபயோகமான காயத்ரீயும் முக்கியமானது.

அதை எந்தக் காலத்திலும் விடக்கூடாது. மருந்தைவிட அது தான் முக்கியமானது. ஒரு நாளாவது ஸந்தியாவந்தனத்தை விட்டு விட்டோமென்று இருக்கக் கூடாது.

கண்டபடி அநாசாரம் பண்ணக் கூடாது. இதுவரையிலும் பண்ணின அநாசாரத்துக்கு, பிராயச்சித்தம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

காயத்ரீ ஜபம் பண்ணுவது, எல்லோராலும் ஆகிற காரியந்தான். ஆயுள் இருக்கிறவரைக்கும், ஸந்தியாவந்தனத்துக்கு லோபம் வராமல் பண்ணவேண்டும். காயத்ரீயை மாத்ருரூபமாக உபாஸிக்க வேண்டும்.

பகவான் பலவிதமான ரூபங்களில் வந்து, பக்தர்களுக்குக் கிருபை செய்கிறுர். நம்மிடம் எல்லாரையும்விட அன்பாகஇருப்பது, மாதாதான். தாயாரிடம் எதை வேண்டுமாஞலும் பயமில்

லாமற் சொல்லலாம். பகவான் எல்லா ரூபமாக இருந்தாலும், மாதா ரூபமாக வந்தால் நல்லது. காயத்ரீயை மாதாவென்று வேதம் சொல்லுகிறது.

''புருஷனுக்குத்தான் காயத்ரீ இருக்கிறது. ஸ்திரீக்கு எந்தக் காயத்ரீ இருக்கிறது?'' என்றால், புருஷன் காயத்ரீயை அநுஷ்டித்தால், ஸ்திரீகளுக்கு க்ஷேமம் உண்டாகும். அதனால் மற்றவர்களுக்கும் க்ஷேமமுண்டாகும்.

பலவித மந்திரங்கள் இருக்கின்றன. அவைகளை ஜபம் பண்ணுவதற்கு முன்பு, ''இன்ன இன்ன பலனை உத்தேசித்துப் பண்ணுகிறேன்'' என்று சொல்லுகிறோம். காயத்ரீமந்திரத்தினுடைய பலன் சித்தசுத்திதான்.

மற்ற மந்திரங்களால் உண்டாகிற பலன்களெல்லாம், கடைசியில் சித்தசுத்தியை உண்டாக்குவதுதான்! அதுவே காயத்ரீக்கு நேரான பலன்.

காயத்ரீ மூன்று வேதத்திலிருந்தும் எடுத்தது. அதனால், மூன்று வேதங்களைச் சேர்ந்தோர்களுக்கும் காயத்ரீ பொதுவானது.

அதர்வவேதத்துக்கு மாத்திரம், வேறு காயத்ரீ உண்டு. அந்த வேதத்தை அத்தியயனம் பண்ணுகிறவர்கள், வேறு உபநயனம் பண்ணிக் கொண்டு, வேறு காயத்ரீ உபதேசம் செய்து கொள்ளவேண்டும். அப்படியே, அதர்வவேதி மற்ற வேதங்களை அத்தியயனம் பண்ணவேண்டுமென்றாலும், மறுபடியும் உபநயனம் செய்து கொள்ள வேண்டும்.

இந்தக் காலத்தில் மாலையிலும் விடியற்காலத்திலும், எல்லாரும் காலந் தவறாமல் ஸந்திவாவந்தனம் செய்யலாம்.

சீக்கிரம் ஆபீஸுக்குப் போக வேண்டியவர்கள் கௌண காலத்தில் காலை ஸந்தியாவந்தனம் செய்ய வேண்டும். மாத்யான்னிக அர்க்கியத்தை ஸாயங் காலத்திலாவது கொடுக்க வேண்டும்.

ஜ்வரம் வந்தால், மற்றவர்களிடம் ''கஞ்சி கொடு, தீர்த்தம் கொடு'' என்று சொல்லுவதைப் போல, ''எனக்காக ஸந்தியாவந்தனம் பண்ணு'' என்று சொல்ல வேண்டும்.

ஆஹாரத்தில் நியமமாக இருக்க வேண்டும். அசுத்தமான ஆஹாரத்தைச் சாப்பிடக் கூடாது. அசுத்தமானவர்களோடு பந்தியில் உட்கார்ந்து சாப்பிடக் கூடாது.

இவ்வளவும் நம்முடைய தேஹ பரிசுத்தியை ரக்ஷிப்பதற்காகத்தான் ஏற்பட்டவை. தேஹசுத்தியைக் காப்பாற்றினால்தான் மந்திரசக்தி இருக்கும். அப்பொழுதுதான், நமக்கும் மற்றவர்களுக்கும் க்ஷேமம் உண்டாகும். மந்திர சக்தியானது அணையாமல் விருத்தியாகக் கிருபை செய்யவேண்டுமென்று, பகவானை எல்லோரும் பிரார்த்திப்போமாக!

# பக்தியை வளர்ப்பது எப்படி?



பகவான்
ஸ்ரீ ராமகிருஷ்ண
பரமஹம்ஸர்

நான் அருந்துவது சாதாரண சாராயம் அல்ல. ''அம்பிகையின் திருநாமம்'' என்னும் நித்தியானந்த சாராயத்தை நான் அருந்துகிறேன். அதனால் கள் குடித்தவன் போன்றே நான் ஆய்விடுகிறேன்.

இந்த சாராயத்தைக் காய்ச்சுதற்கு, என் குரு ''உபதேசம்'' என்னும் கருப்புவட்டைக் கொடுத்தார். என்னிடத்துள்ள ''அருள் நாட்டம்'' அதைப் புளிக்கச்செய்தது.

''ஞானம்'' என்னும் சாராயக்காரன் எனக்கு அதை ஆயத்தப்படுத்துகிறான். ''மந்த்ரம்'' என்னும் புட்டியிலிருந்து என் மனம் அந்த மதுபானத்தை ஏற்றுக்கொள்கிறது. அன்னையின் நாமத்தை ஓத ஓத அந்த மதுவானது மேலும் மேலும் தூயதாகிறது.

விதையும் அதில் கிளம்பிவருகிற முளையும் மெல்லியவை. ஆனால் கடினமான பூமியைத் துளைத்துக் கொண்டு போகிற ஆற்றல் அந்த முளைக்கு உண்டு. அங்ஙனம், ''இறைவனது திருநாமம்'' என்னும் பீஜம், ஆற்றல் மிகப் படைத்தது. கல் நெஞ்சத்தையும் அது பண்படுத்துகிறது.

பகவானுக்கும் அவனுடைய திருநாமத்துக்கும் வித்தியாசம் இல்லை. நாமம் நாமிக்கு நிகர்.

தொட்டியில் வைத்துள்ள தண்ணீர், காற்றில் உலர்ந்து போய்

விடுகிறது, அதேவிதத்தில் உடலைச் சார்ந்துள்ள பாபங்கள், பகவான் நாமத்தை உச்சரிப்பதால் அகன்று போய்விடுகின்றன. அருள் தாகம் பிடித்து, ஆத்ம சாதனங்களை ஒழுங்காகத் தினந்தோறும் செய்துவரவேண்டும்.

யானை ஒன்றைக் குளிப்பாட்டிய பிறகு, அதன் போக்கில் விட்டுவிட்டால் மண்ணை வாரி அது மேலே தூவிக்கொள்ளும். குளிப்பாட்டியவுடனே அதற்குரிய கட்டுததறியில் அதைக் கட்டிவைத்து விட்டால், அது சுத்தமாயிருக்கும். அங்ஙனம், இறைவனுடைய திருநாமத்தை ஓதுவதோடு கூட, மனத்தில் ஆசாபாசங்கள் எழாதிருக்க வேண்டும்.

இக்கலியுகத்தில், இறைவனுடைய திருநாமத்தை ஓயாது ஓதிக்கொண்டிருத்தல் ஒன்றே போதுமானது. ஆனால் அப்படி ஓதுதலுடன், உள்ளுணர்வும் பக்தி விசுவாசமும் ததும்பிக் கொண்டிருக்க வேண்டும். வெறும் சொல்லால் ஒன்றும் ஆகிவிடாது.

பக்தியை வளர்ப்பது எங்ஙனம்?

இறைவனுடைய திருநாமத்தை ஓயாது உச்சரிப்பதால், பக்தி ஓங்குகிறது. பக்தி ஓங்குமளவு, சுக ஜீவனத்தில் விருப்பம், காமம், குரோதம் முதலிய தீமைகள், தாமாக மறைந்து போய் விடுகின்றன.

பழைய பாத்திரம் ஒன்றைத் தினந்தோறும் துலக்க வேண்டும். இல்லையேல் அது துருப்பிடித்து விடுகிறது. இறைவனுடைய திருநாமத்தை ஓதுவதையும், அவரைப் புகழ்ந்து போற்றுவதையும், நாள்தோறும் செய்யவேண்டும். இல்லாவிடில் மனது துருப்பிடித்து விடுகிறது.

நாங்கள் பாபிகள். எங்கள் பாபத்தைப் போக்குதற்கு நாங்கள் என்ன செய்யவேண்டும்?

கைகொட்டிக்கொண்டு, இறைவனுடைய திருநாமத்தை ஓதுங்கள். கைகொட்டும்பொழுது, மரத்தின்மீதுள்ள பறவைகள் பறந்தோடிவிடுகின்றன. சரீரம் என்னும் மரத்தின் மீது, பாபம் என்னும் பறவைகள் அமர்ந்திருக்கின்றன. இறைவனுடைய திருநாமத்தைக் கைகொட்டிக்கொண்டு உச்சரிக்கும் பொழுது, பாபங்கள் அனைத்தும் பறந்தோடி விடுகின்றன.

அவரவர் மனநிலைக்கேற்ற ஆற்றலை, சாதகர்கள் அடையப் பெறுகின்றனர். ஹனுமானுக்குக் கடலைத் தாண்டிக்குதிக்கிற சக்தி வந்தது. "நான் ராமனுடைய திருநாமத்தை ஓதுகிறேன்; அவனுக்கு சேவை செய்கிறேன். அவனருளால். நான் புனிதமடைந்துள்ளேன். என்னால் ஆகாதது என்ன?" என்று அவர் உணர்ந்தார். அதற்கேற்ற தெய்வீக சக்தி, அவருக்கு எளிதில் வந்தது.

பித்தவாத ஜுரம் கண்டிருக்கிற ஒருவனுக்கு, நாவில் சுவை

ஒன்றும் இல்லாது போய்விடுகிறது. அப்பொழுது அவன் உயிர் தப்புவது அரிது. ஆனால், ஏதாவது ஓர் உணவிலாவது அவனுக்குச் சிறிது சுவையிருக்குமாகில், அவன் அந்நோயினின்று ஒருவேளை தப்பித்துக் கொள்ளலாம்.

சாதகன் ஒருவனுக்கு ஈசனுடைய திருநாமம் எதிலும் சுவை உண்டாகாவிட்டால், அவன் உய்வு அடைவது அரிது. ஆனால் துர்கை, கிருஷ்ணன், சிவன் ஆகிய பல திருநாமங்களில் ஏதேனும் ஒரு திருநாமத்திலாவது ஒருவனுக்கு சுவை ஏற்படுமாகில், அவன் அஞ்சுதற்கு ஒன்றுமில்லை. கடவுள் பற்று அவனுக்கு நாள் ஏற ஏற அதிகரிக்கும்; பேரானந்தம் மேலிடும்.

ராமாயணம், மகாபாரதம் போன்ற நூல்கள் வாசிப்பதை சிரத்தையுடன் கேட்கிறவர்களுக்கு, பக்தியும் விசுவாசமும் ஓங்குகின்றன.

உழவன் சிரமப்பட்டுத் தன் பயிர்பச்சைகளுக்கு நீர் கொண்டு வந்து சேர்ப்பதுபோன்று, நீ தீவிரமான முயற்சிகள் எடுத்துக் கொண்டு ஆத்ம சாதனங்கள் செய்யவேண்டும்.

மனத்தை ஈசனிடம் ஒன்றுபடுத்துவது தான் குறிக்கோள். எக்காரணத்தை முன்னிட்டும், ஈசுவர சிந்தனை மனத்தைவிட்டு அகன்று போய்விடலாகாது. தைலதாரை போன்று, மனம் இடையறாது ஈசனிடத்துப் போய்க்கொண்டிருக்க வேண்டும்.

அறை ஒன்றை, அதன் நடுவில் உட்கார்ந்து கொண்டு பார்ப்பதும், ஒரு மூலையில் உட்கார்ந்து கொண்டு பார்ப்பதும் ஒன்றே. அவ்வறைதான் பார்க்கப்படுகிறது. நீ தெய்வத்தோடு எத்தகைய இணக்கம் வைத்தாலும் அது பொருத்தமானதே.

எதைப் பற்றியும் ஐயம் கொள்ளுவது ஜீவர்களுடைய இயல்பு. ஆனால், பக்திநெறியில் ஆழ்ந்து செல்லுகிறவர்களுக்கு, பகவத் விஷயங்களில் ஐயம் எதுவும் உண்டாவதில்லை.

பாம்பின் வாலைத் தொட்டால் அது சீறி விழுகிறது. தன் உயிரனைத்தும் வாலில் வைத்திருப்பது போன்று, அது நடந்துகொள்கிறது.

அதேவிதத்தில், சாது ஒருவன் ஆத்ம சாதனத்தில் தன் முழு கவனத்தைச் செலுத்துகிறான். அந்த சாதனத்துக்கு இடைஞ்சல் உண்டாவதற்கு, அவன் இடந்தரமாட்டான்.

ஒரு கிராமத்தில் ஒரு தடவை நெடுநாளாக மழை பெய்யவில்லை. ஓர் உழவன், ஒரே தினத்தில் எப்படியாவது நதியினின்று தன் வயலுக்குத் தண்ணீர் கொண்டு வந்தாக வேண்டும் என்று தீர்மானித்து, பெருமுயற்சியுடன் வாய்க்காலைத் துப்புரவுபடுத்திக் கொண்டிருந்தான்.

மத்தியான நேரம், அவன் புதல்வி வந்து, நீராடுவதைப் பற்றியும் உணவு அருந்துவதைப் பற்றியும் ஞாபகமூட்டினாள். ஆனால் உழவன் கோபித்துக் கொண்டு, அவளை விரட்டியோட்டி விட்டான்.

சிறிது நேரத்திற்குப் பிறகு அவனுடைய மனைவி முன்வந்து,

நீராடி உணவருந்த வேண்டும் என்றும், வாய்க்கால் வேலையை அதன் பிறகு பார்த்துக் கொள்ளலாம் அல்லது அடுத்த நாள் பார்த்துக் கொள்ளலாம் என்றும், வாதாடினாள். ஆனால் உழவனோ, மண்வெட்டியைத் தூக்கிக்கொண்டு அவளைப் புடைக்க ஓடிவந்தான்.

"என்ன, உனக்கு அறிவு இல்லையா? பயிர்கள் வாடுகின்றன! பிறகு நீங்கள் எல்லோரும் பட்டினி கிடக்கவேண்டிவரும்! நீர் பாய்ச்சாது நான் இன்று என் வேலையை நிறுத்தேனா!" என்று அதட்டினான். மனைவி பயந்து வீட்டுக்கு ஓடி விட்டாள்.

நெற்றிவியர்வை நிலத்தில் விழ, உழவன் வாய்க்காலைத் திருத்தியமைத்து, ஆற்று நீர் அதன் வழியே ஓடச் செய்தான். அஸ்தமன வேளையில், சல சலவென்று நதியினின்று நீர் ஓடிவந்து நிலத்தில் பாய்ந்தது. அதனால் அவனுக்குப் பரமதிருப்தி உண்டாயிற்று.

பிறகு வீட்டுக்குச் சென்று, நீராடி உணவு அருந்திவிட்டு, அயர்ந்து உறங்கச்சென்றான். தீவிர வைராக்கியம் உடையவர்கள், ஆத்ம சாதனத்தில் அந்த உழவனைப் போன்றே உழைக்கின்றனர்.

மற்றொரு உழவன், மனைவியின் வேண்டுதலுக்கிணங்கி மத்தியான வேளையில் வாய்க்கால் வெட்டும் வேலையை நிறுத்தி விட்டான். சாதனத்தில மந்த அதிகாரியின் போக்கு அத்தகையது.



# ஸ்ரீ தத்தாத்ரேயர் மஹிமை

ரிஷிகேசம்
ஸ்ரீ ஸ்வாமி சிவானந்தா

அத்திரி மகரிஷியின் பத்தினி அனசூயை. அவள் கற்பின் சிகரமாகக் கருதப்பட்டு வந்தாள்.

சப்த ரிஷிகளுள் ஒருவர் அத்திரி மகரிஷி. அவர் மிக்க சக்தி வாய்ந்தவர். அனசூயை பதிவிரதா தர்மத்தில் வேரூன்றிய உத்தமி. பிரஹ்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மும்மூர்த்திகளுக்குச் சமமான புத்திரர்களைப் பெற வேண்டுமென, பலகாலம் தவம் புரிந்தாள்.

சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோர், ஒரு சமயம் தத்தம் பதிகளை, அனசூயையின் கற்பைப் பரிசோதிக்குமாறு வேண்டினார்கள். அனசூயையிடம் நிர்வாண பிக்ஷை கேட்குமாறு வற்புறுத்தினார்கள்.

அனசூயையின் அகோர தபசைப் பற்றியும், அவளது நோக்கத்தைப் பற்றியும், திரிமூர்த்திகள் ஞான திருஷ்டியின் மூலம் உணரலானார்கள். கற்பைச் சோதிக்கக் கருதி, அவர்கள் சந்நியாசிகளைப்போல் ஆடை உடுத்துக் கொண்டு, அனசூயையின் முன் தோன்றி, நிர்வாண பிக்ஷை அளிக்குமாறு கேட்டார்கள்.

அ—2

அனசூயைக்குப் பெருங் குழப்பமாயிருந்தது. பிக்ஷுக்களுக்கு இல்லை என்று இயம்பக் கூடாது. தனது பதிவிரதா தர்மத்தையும் காத்துக் கொள்ள வேண்டும். தனது கணவரின் உருவத்தைத் தியானித்து, அவரது சரணகமலங்களிலே சரண் புகுந்து, அவரது சரணங்களைக் கழுவுவதற்கு உபயோகிக்கப்பட்ட தீர்த்தத்திலே சில துளிகளை, அம்மூன்று சந்நியாசிகளின் மீதும் தெளித்தாள்.

அச்சரணாமிருதத்தின் மகிமையினால், திரிமூர்த்திகள் மூன்று குழந்தைகளாக மாறிவிட்டார்கள்.

அதே சமயம், அனசூயை தனது மார்பிலே பால் பெருகுவதை உணரலானாள். அப்பாலகர்கள் தனக்குச் சொந்தமானவர்களென்று கருதியவளாய், அவள் நிர்வாணமாக அப்பாலகர்களை மடிமீதிருத்தி பாலூட்டிச் சீராட்டித் தொட்டிலிலிட்டு ஆட்டினாள்.

ஸ்நானத்திற்குச் சென்றிருந்த அத்திரி மகரிஷி, ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார். வந்ததும், அனசூயை அதுகாறும் நிகழ்ந்த சம்பவங்களை எடுத்துரைத்து, மூன்று

பாலகர்களையும் அவரது சரணார விந்தங்களில் சமர்ப்பித்து வணங்கினாள்.

ஆனால் மகரிஷிக்குத் தமது ஞானதிருஷ்டியினாலேஇவையெல்லாம் ஏற்கெனவே தெரிந்திருந்தன. அவர் மூன்று பாலகர்களையும் சேர்த்து அணைத்து அன்பு செலுத்தினார். அம் மூவரும், மூன்று சிரங்களும், ஆறு கரங்களும், ஒருடலும், இரு பாதங்களும் கொண்ட ஓர் உருவம் ஆனார்கள்.

இதற்கிடையில், நாரத மாமுனிவர் சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகியோரிடம் சென்று, அவர்கள் கணவன்மார் அனசூயையின் பதிவிரதா தர்மத்தின் வலிமையினால் பாலர்களாக மாற்றப்பட்டு விட்டார்கள் என்றும், அவர்கள் அத்திரி மகரிஷியிடம் போய் பதி பிக்ஷை கேட்டாலன்றி அவர்கள் திரும்பிவரமாட்டார்கள் என்றும், சாங்கோ பாங்கமாய்க் கூறினார்.

அப்பால், சரஸ்வதி, லக்ஷ்மி, பார்வதி ஆகிய மூவரும் சாதாரண பெண்டிராக வடிவெடுத்துக் கொண்டு, அத்திரி மகரிஷியிடம் சென்று பதிபிக்ஷை வேண்டினார்கள். அவர்களை அத்திரி மகரிஷி மரியாதையாக வரவேற்று, கை கட்டிக்கொண்டு, அவர்களிடம் தமது விருப்பமும் தம் மனைவியின் விருப்பமும் நிறைவேறுமாறு பிரார்த்தித்தார்.

பிறகு திரிமூர்த்திகள் மகரிஷியின் முன் தமது சுயரூபங்களுடன் பிரசன்னமாகி, "மகரிஷியே! இக் குழந்தை ஓர் பெரிய மகானாகவும், அனசூயையின் விருப்பப்படி எங்களுக்குச் சமமானவனாகவும் இருப்பான். இக் குழந்தைகளுக்குத் தத்தாத்ரேயன் என்ற நாமம் பொருந்தும்" என்று திருவாய் மலர்ந்தருளினார்கள்.

தத்தாத்ரேயர் வளர்ந்து யௌவனப் பருவம் எய்தினார். அவரிடம் திரிமூர்த்திகளின் சாயலும் ஒளியும் நிறைந்திருந்தமையாலும், அவர் ஓர் மகத்தான ஞானியாதலாலும், எல்லா ரிஷிகளும் துறவிகளும் அவரை வணங்கலானார்கள்.

அவர் பெருந்தன்மையும் அமைதியும் வாய்ந்த ஓர் அவதூதராய் இருந்தார். வேதாந்தத்தின் பேருண்மையை போதித்தார்.

தத்தாத்ரேயர் சுப்பிரமண்ய சுவாமிக்கு போதித்ததே அவதூத கீதை! இது மிக்க மதிப்பு வாய்ந்த நூல். வேதாந்தத்தின் உண்மைகளும், மர்மங்களும், மற்றும் ஆத்ம சாக்ஷாத்காரத்தின் நேரடியான அனுபவங்களும், இதில் பொதிந்துள்ளன.

ஒரு காலத்தில், தத்தாத்ரேய சுவாமி காட்டில் ஆனந்தமாகச் சஞ்சரித்துக் கொண்டிருந்தார். அப்போது, அவரை யது மன்னர் சந்தித்தார்.

தத்தாத்ரேயரிடம் யது மன்னர், ஆனந்தத்தின் ரகசியங்கள் என்ன என்பதையும், அவருடைய குருவின் பெயர் என்ன என்பதையும் விசாரித்தார்.

அதற்குத் தத்தாத்ரேயர், ஆத்மா மாத்திரமே தமக்குக் குரு என்றும், இருந்த போதிலும் இருபத்து நான்கு நபர்களிடம் ஞானத்தைக் கற்றுக் கொண்டபடியால், அவர்கள் எல்லோரும் தமது குருமார்கள் என்றும் கூறினார்.

அப்பால், தத்தாத்ரேயர் தமது இருபத்து நான்கு குருமார்களின் பெயர்களைக் கூறி, அவர்களிடமிருந்து தாம் பெற்றுக் கொண்ட ஞான விவரங்களையும் விளக்கலானார்.

1. நான் பூமியினிடமிருந்து பொறுமையையும், பிறர்க்கு நன்மை புரியும் சுபாவத்தையும் கற்றுக் கொண்டேன்.

2. நான் தண்ணீரிலிருந்து தூய்மை எனும் பண்பைக் கற்றுக் கொண்டேன.

3. இவ்வுலகில் பல மக்களுடன் தொடர்பு கொண்டாலும் பற்று இல்லாமல் இருக்கும் தன்மையை, காற்றிலிருந்து நான் கற்றுக் கொண்டேன்.

4. சுய ஞானமும் தபசும் கொண்ட ஜ்வாலையால் பிரகாசிக்கக் கற்றுக்கொண்டேன் நெருப்பிலிருந்து.

5. ஆத்மா சர்வ வியாபகமாயிருப்பினும், எந்தப் பொருளுடனும் எவ்விதத் தொடர்பும் கொள்ளவில்லை என்பதை, ஆகாயத்திலிருந்து கற்றுக் கொண்டேன்.

6. ஆத்மா எப்போதும் பூர்ணமுள்ளதென்றும், மாறுதலில்லாததென்றும், அதன்மீது உபாதிகளே நிழலை வீசுகின்றன என்றும், சந்திரனிடமிருந்து நான் கற்றுக்கொண்டேன்.

7. பல்வேறு தண்ணீர்ப் பானைகளிலே, ஒரே சூரியன் பல்வேறு பிம்பங்களாகத் தோன்றுவது போல, பல்வேறு மனங்களிலே பிரதிபலிக்கும் போது, ஒரே பிரஹ்மம் பல்வேறாகத் தோன்றுகிறது. இப் பாடத்தை சூரியனிடமிருந்து கற்றுக் கொண்டேன்.

8. ஒரு காலத்தில், ஜோடிப் புறாக்களைக் குஞ்சுகளுடன் கண்டேன். வேடன் விரித்திருந்த வலையில் குஞ்சுகள் விழுந்து பிடிபட்டன. குஞ்சுகளின் மீது வைத்த அபாரமான வாஞ்சையினால், தாய்ப் புறாவும் வலையில் விழுந்து சிக்குண்டது. இதிலிருந்து, நான் பந்தத்திற்குக் காரணம் பற்றுதான் என்பதைக் கற்றுக்கொண்டேன்.

9. மலைப்பாம்பு உணவு தேடி அலைவதில்லை. தனக்குக் கிடைத்த

வற்றையே உட்கொண்டு, அது ஒரே இடத்தில் திருப்தியாகப் படுத்திருக்கிறது. உணவு பற்றி மனம் நாடாமல், சாப்பிடக் கிடைத்தவற்ருேடு திருப்திப்பட வேண்டும் என்று நான் மலைப் பாம்பிடமிருந்து கற்றுக்கொண்டேன்.

10. நூற்றுக்கணக்கான நதிகள் சங்கமமானுலும், எப்படி சமுத்திரம் சஞ்சலப்படாமல் இருந்த விடத்திலேயே இருக்கிறதோ, அப்படியே ஞானிகள் எல்லாவித மான கஷ்டங்களிலும், துன்பங்களிலும், ஆசையூட்டுதல்களிலும், அசையாமல் நிதானத்துடன் இருப்பார்கள்.

11. பார்க்கிற புலனைக் கட்டுப்படுத்தி, ஆத்மாவில் மனத்தைப் பதியவைக்கும் புதிய பாடத்தை, வண்ணத்துப்பூச்சியிலிருந்து நான் கற்றுக்கொண்டேன்.

12. ஒரு வீட்டிலிருந்து கொஞ்ச உணவும், மற்ற வீட்டிலிருந்து கொஞ்ச உணவுமாய், இப்படி நான் ஏற்றுப் பசியைத் தணித்துக் கொள்கிறேன். கிரகஸ்தனுக்கு நான் சுமையாக இருப்பதில்லை. இப்பாடத்தை நான் தேன் சேகரிக்கும் கறுப்புத் தேனியினுல் கற்றுக்கொண்டேன்.

13. தேனிக்கள் வெகு சிரமப்பட்டுத் தேனைச் சேகரிக்கின்றன. வேடன் தேனைச் சுலபமாய்க் கைப்பற்றிக் கொள்கிருன். இதிலிருந்து, பொருள்களைக் குவித்து வைத்தலில் பயனில்லை என்ற பாடத்தை நான் கற்றுக் கொண்டிருக்கிறேன்.

14. ஆண் யானை காமவெறியால் குருடாகி, பெண் யானையை கண்ட மாத்திரத்திலேயே புல்லினுல் மூடப்பட்ட குழியிலே விழுகிறது. ஆகையால் ஒருவன் காமத்தை ஒழிக்கவேண்டும். யானையிலிருந்து நான் கற்றுக் கொண்ட பாடம் இதுவே.

15. இன்னிசையின்மீது வைத்த ஆசையினுலே, மான்வசியமாக்கப்பட்டு வேடன் கண்ணியில் சிக்கிக் கொள்கிறது. ஆகையால், ஒருவன் சிற்றின்பப் பாடல்களை ஒரு போதும் கேட்கலாகாது. இப்பாடத்தைத்தான்மானிடமிருந்து கற்றுக்கொண்டேன்.

16. இரை உட்கொள்ளப் பேராசைப்படும் மீன் தூண்டிலுக்கு பலியாகிறது. அதுபோல, ஆகாரத்திற்காகப் பேராசைப் பட்டால் மனிதன் தன் சுதந்திரத்தை இழப்பதன்றி, நாசமும் அடைகிருன். ஆகையால் உணவுப் பேராசை ஒழிக்கப்பட வேண்டும்.

17. பிங்களா எனும் நாட்டியப் பெண், ஒருநாள் இரவு, வழக்கப்படி தன்னை நாடி வருபவர்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தாள். எவருமே வரவில்லை. அன்று அவ்வளவுதான் என்று கருதி ஆழ்ந்து தூங்கலானுள். எதிர் பார்ப்பதை விட்டுவிடுவதால்

திருப்தியான மனம் ஏற்படுகிறது என்ற பாடத்தை, அந்தப் பெண்ணிடமிருந்து கற்றுக் கொண்டேன்.

18. ஓர் அண்டங் காக்கை, மாமிசத் துண்டு ஒன்றைக் கொத்திக்கொண்டு வந்தது. இதர பறவைகள் அதனைத் துரத்திச் சண்டையிட்டன. உடனே அது மாமிசத்துண்டைக் கீழே போட்டு சாந்தியும், ஆறுதலும் பெற்றது. சிற்றின்ப சுகங்களை நாடி ஓடுகிறபோது, மனிதன் எல்லாவிதமான தொல்லைகளுக்கும் துன்பங்களுக்கும் உள்ளாகிறான் என்பதும், அச்சிற்றின்ப சுகங்களை விட்டு விட்டால், அவன் அண்டங்காக்கையைப் போல் மகிழ்ச்சி அடைகிறான் என்பதுமான பாடத்தை, இதிலிருந்து நான் கற்றுக் கொண்டேன்.

19. பாலைக் குடிக்கிற குழந்தை எந்த ஒரு கவலையோ தொல்லையோ, தடுமாற்றமோ இல்லாமல் எப்போதும் உற்சாகத்துடன் இருக்கிறது. உற்சாகப் பண்பாட்டை குழந்தையிடமிருந்து நான் கற்றுக்கொண்டுள்ளேன்.

20. பலபேர்களிடையில் வசிப்பதனால், வேற்றுமையும், சஞ்சலமும், தகராறும், சண்டையும் விளைகின்றன. இரண்டு நபர்களிடையில்கூட, அநாவசியமான வார்த்தைகள் அல்லது சச்சரவு எழக்கூடும். இதை நான் கன்னியரிடமிருந்து கற்றுக்கொண்டேன். துறவி அல்லது சந்நியாசி, ஏகாந்தத்தில் தனிமையாய்க் காலங் கழித்தல் வேண்டும்.

21. பாம்பு தனக்கென வளை தோண்டிக்கொள்வதில்லை. பிற ஜந்துக்களால் தோண்டப்பட்ட பொந்துகளில், பாம்பு குடியிருக்கிறது. அதுபோல, துறவியானவன் தனக்கென வீடு ஒன்றைக் கட்டிக்கொள்ளலாகாது. பிறரால் ஆக்கப்பட்ட கோவிலிலோ, குகையிலோ, அவன் வசிக்க வேண்டும்.

22. தீவிரமான ஏகாக்ரச் சித்தத்தின் சுபாவத்தை, நான் அம்பு எய்கிறவனிடமிருந்து கற்றுக்கொண்டேன்.

23. சிலந்தி நீண்ட இழைகளைத் தனது வாயிலிருந்து கக்கி, கூடு கட்டிக் கொள்கிறது. தானே பின்னிக்கொண்ட வலைக்குள்ளே, அது சிக்கிக்கொள்கிறது. இதைப்போல, மனிதன் தனது கருத்துக்களினால் வலை ஒன்றைப் பின்னிக்கொண்டு, அதில் சிக்கித் தடுமாறுகிறான். ஆகையால் ஞானி, உலகியல் எண்ணங்கள் ஒவ்வொன்றையும் ஒழித்துக் கட்டி, பிரஹ்மம் ஒன்றையே சிந்திக்க வேண்டும். இப்பாடத்தையே சிலந்தியிடமிருந்து நான் கற்றுக்கொண்டேன்.

24. வண்டு, புழுவைப்பிடித்துக் கொண்டு வந்து, தனது கூட்டில் வைத்துக்கொள்கிறது. அந்தப் புழு, எப்போது வண்டு வந்து தன்னைக் கொட்டுமோ என்று

பயந்து, சதாகாலமும் வண்டையே சிந்தித்துக்கொண்டிருந்து சடைசியில் வண்டாகவே மாறி விடுகிறது. உடலுக்குள்ள பற்றுக்கள் அனைத்தையும் ஒழித்து விட்டு, ஆத்மாவையே சதா காலம் சிந்திப்பதன் மூலம், என்னையே ஆத்மாவாக மாற்றி யமைத்துக் கொண்டு மோக்ஷம் பெறுவதற்குள்ள பாடத்தை, வண்டும் புழுவும் என்ற உதார ணத்திலிருந்து நான் கற்றுக் கொண்டேன்.

தத்தாத்திரேயருடைய உப தேசங்களைக் கேட்ட மன்னன் பெரிதும் மகிழ்ச்சியடைந்தான். அவன் உலகத்தைத் துறந்து, இடையறுது ஆத்மத் தியானம் பழகலானுன்.

ஞானத்தை நாடுவோர் அனை வரும் தத்தாத்ரேய சுவாமிகளின் உதாரணத்தைப் பின்பற்றி இம்மை மறுமை நலன்களை எய்து வாராக.

ஓம் தத் ஸத்

# ஊழ்வினை விடாது!



ஸ்ரீ திருமுருக கிருபானந்த வாரியார்

சிலப்பதிகாரம் என்பது, சிலம்பினால் விளைந்த வரலாறு. இது பஞ்ச காவியத்துள் ஒன்று.

கண்ணகியைக் கதாநாயகியாக வைத்து, புகார்க் காண்டம், மதுரைக் காண்டம், வஞ்சிக்காண்டம் என்ற மூன்று பிரிவுகளாக அமைத்து, சிறந்த காவியமாக இளங்கோ அடிகள் பாடியருளினார். இவர் சேரநாட்டு மன்னர். இளமையிலேயே துறவு பூண்டவர்.

"நெஞ்சை அள்ளும் சிலப்பதிகாரம்" என்று மகாகவி பாரதியார் பாடியிருக்கின்றார். இனிய செந்தமிழ் இன்பம் நிறைந்த அறிய பெரிய காவியம் இது.

ஊழ்வினை உறுத்துவந்து ஊட்டும் என்ற பெரிய உண்மையை உணர்த்துகின்றது இக் காவியம்.

கலிங்கநாடு என்ற சிறந்த நாட்டின் தலைநகரங்கள், சிங்கபுரம், கபிலபுரம் என்பன. இந்த நகரங்களில் பங்காளிகளான இரு அரசர்கள் அரசு புரிந்தார்கள்.

இவர்களுக்குள் ஒற்றுமைக் குறைவு இருந்தது. அதனால் சிங்கபுரத்திற்கும் கபிலபுரத்திற்கும் ஆட்கள் போய் வருவதில் கட்டுப்பாடு இருந்தது.

கபிலபுரத்திலிருந்து, சங்கமன் என்ற ஒரு பொன்னகை வியாபாரி, சிங்கபுரம் வந்து நகை வாணிபம் புரிந்தான்.

அவனது பகைவனாகிய பரதன், அரசனிடம் போய், "சங்கமன் பகையரசனுடைய ஒற்றன்" என்று பொய்மையாகப் புகன்றான்.

சிங்கபுர மன்னன் சினமுற்று, சங்கமனைக் கொன்றுவிட்டான்.

சங்கமனுடைய மனைவி மிகுந்த கற்புடையவள். அவள் பெயர் நீலி அவள் அருந்துயரமுற்றாள். பதினான்கு நாட்கள் நிலை குலைந்து அலைந்தாள். மலைமீது ஏறி நின்று "என் கணவனுக்கு இந்த இடர் புரிந்தோர், மறுபிறப்பில் இத் துன்புற்று மாள்க! என்று கூறி வீழ்ந்து இறந்தாள்.

சங்கமனைக் கொல்வித்த பரதன், கோவலனாகப் பிறந் தான்.

"பிறர்க்கின்னா முற்பகல் செய்
யின் தமக்கின்னா
பிற்பகல் தாமே வரும்"

என்ற திருவள்ளுவரின் திருவாக் கின்படி, முன்வசய் தீவினையால் கோவலன் கொலையுண்டு மாண் டான்.

இனி கண்ணகி தேவியின் வர லாற்றுச் சுருக்கத்தைக் காண் போம்.

காவிரிப்பூம் பட்டினத்தில், வணிகர் குலத்தில் பிறந்தவள் கண்ணகி. பத்தினிக் கடவுள், வீர பத்தினி, மங்கல மடந்தை, தரும பத்தினி என்ற பரியாய நாமங் களைப் படைத்தவள். மாநாய்கன் புதல்வி.

இவள், மாசாத்துவான் புதல் வன் கோவலன் என்ற பெருஞ் செல்வனை மணந்தாள்.

கோவலன், மாதவி என்ற கணி கையின் நட்பினால், பொருள் முழு வதும் இழந்தனன். இந்திர விழா வின்போது, மாதவி பாடிய கானல்வரியால் மனம் மாறுபட்டு அவளை விடுத்துக் கண்ணகிபால் வந்தான்.

வறுமையுடன் வந்த கணவனை கண்ணகி வணங்கி இன்சொல் காட்டி வரவேற்றாள்.

அவளுடன் புறப்பட்டு அவன் மதுரையையடைந்தான். கண்ண கியின் காற்சிலம்பை விற்கும் பொருட்டு ஒரு பொற்கொல்ல னிடம் சென்றான். அக்கொல்லன், ஏற்கெனவே அரண்மனையில் களவு போன சிலம்பை இவன் திருடி னான் என்று அரசனிடம் புனைந் துரை புகன்றான். பாண்டியனாகிய நெடுஞ்செழியன், கோவலனைக் கொல்வித்தான்.

அதனை யறிந்த கண்ணகிதேவி ஆறொணாத் துயருடன் அரச னிடம் சென்று, தனது மற்றொரு காலில் இருந்த சிலம்பைக் கொண்டு தன் சிலம்பில் மாணிக் கப்பரல் இருப்பதை அறிவித்து, தன் கணவன் கள்வன் அல்லன் என மெய்ப்பித்தாள்.

நெடுஞ்செழியன் "நானே கள் வன்" எனக் கீழே வீழ்ந்து உயிர் துறந்தனன். அவன் மனைவி கோப் பெருந்தேவியும் வீழ்ந்து மாண்ட னள்.

கண்ணகி சினந் தணியாது, தனது கொங்கையைத் திருகி எறிந்து மதுரையை எரித்துவிட்டு வையை ஆற்றங்கரை யோரமா கப் பதினான்கு நாட்கள் நடந்து, செங்குன்று என்ற மலைமீது ஏறி, ஒரு வேங்கை மரத்தின் கீழ் நின் றாள். அங்கே தெய்வ வடிவுடன் தோன்றிய கோவலனுடன் சுவர்க் கம் புகுந்தாள்.

செங்குட்டுவன் என்ற சேர மன்னன், கண்ணகியின் பெரு மையை மலைவேடர் கூறக்கேட்டு, வடநாட்டு மன்னர்களாகிய கனக விசயரை வென்று, இமயமலையி

லிருந்து கல் கொணர்ந்து சண்ணகி படிமஞ்செய்து, கோயிலே எழுப்பி வழிபாடு புரிந்தான்.

இளங்கோவடிகள் இந்த வரலாற்றை, மதுரை சங்கப் புலவர் சாத்தனுர் நேரில் தான் கண்டதைக் கூறக் கேட்டுப் பாடி முடிக்கின்றபோது, அறநெறிகளே அமுதமொழிகளால் உலகிற்கு உணர்த்துகின்ருர்:

"..... ......திருத்தகு நல்லீர்

பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வம் தெளிமின் தெளிந் தோர்ப் பேணுமின்

பொய்யுரை அஞ்சுமின் புறஞ் சொல் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க் கொலே நீங்குமின்

தானஞ் செய்ம்மின் தவம்பல தாங்குமின்

செய்ந்நன்றி கொல்லன்மின் தீ நட்பு இகழ்மின்

பொய்க்கரி போகன் மின் பொருள்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக் களம் அகலா தணுகுமின்

பிறவோர் அவைக்களம் பிழைத் துப் பெயர்மின்
பிறர்மனே அஞ்சுமின் பிழை உயிர் ஓம்புமின்

அறமனே காமின் அல்லவை கடி மின்
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளேக் கோட்டியும் விரகி னில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக் கையும் நிலேயா

உளநாள் வரையா தொல்லுவ் தொழியாது
செல்லுந் தேஎத்துக்கு உறு துணே தேடுமின்

மல்லன்மா ஞாலத்து வாழ்வீர் ஈங்கென்."

●

## நல்ல செய்தி

திருப்புகழ்ஸ்வாமிகள் எனவழங்கும் மகான் வண்ணச்சரபம் தண்டபாணி ஸ்வாமிகளின் 73-வது குருபூசை விழாவும் லக்ஷார்ச்சனேவிழாவும், சென்ற ஜூலே மாதம் 9-10 தேதிகளில், திருவாமாத்தூர் ஸ்ரீ கௌமாரமடாலயத்தில் மிக விமரிசையாக நடைபெற்றன. பல தவத்திருவாளர்களும், புலவர்களும், பிரமுகர்களும், சங்கீத வித்வான்களும் வந்து கலந்து கொண்டு, விழாவினைச் சிறப்பித்தனர்.

# திருநீற்றின் பெருமை

மதுரை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீசோமசுந்தர
ஸ்ரீஞானசம்பந்த தேசிக பரமாசார்யஸ்வாமிகள்

1. உடல் நாற்றத்தைப் போக்கும்.
2. தொற்றுநோய்க் கிருமிகளைக் கொல்லும்.
3. தீட்டுக் கழிக்கும்.
4. உடலைச் சுத்தம் செய்யும்.
5. வியாதிகளைப் போக்கும்.
6. பில்லி, சூனியம், கண்ணேறு பாதிக்காது காக்கும்.
7. முகத்திற்கு அழகைத்தரும்.
8. ஞாபக சக்தியை உண்டாக்கும்.
9. புத்தி கூர்மையைத் தரும்.
10. ஞானத்தை உண்டாக்கும்.
11. பாவத்தைப் போக்கும்.
12. பரகதியைத் தரும்.

சுத்தமான பசுவின் சாணத்தை, உருண்டை உருண்டையாகப் பிடித்து, வெயிலில் உலர்த்தவேண்டும்.

அவ்வாறு உலர்ந்த உருண்டைகளை மூடக்கூடிய அளவு உமியைக் குவித்து, தீ மூட்டவேண்டும்.

மூன்று அல்லது நான்கு தினங்கள் கழித்து, அக்குவியல் நன்ருக நீறி, உமியும் சாணியும் சாம்பலாகி இருக்கும்.

உமிச் சாம்பலைவிலக்கி, நீறியிருக்கும் சாணி உருண்டைகளை எடுத்து, துணியினல் வடிகட்டி வைத்துக் கொள்ளவேண்டும். அதுவே திருநீறு அல்லது விபூதியாகும்.

காலையில் படுக்கையை விட்டு எழுந்தவுடனும், குளித்த பின்னரும், சாப்பிடுவதற்கு முன்னரும், சாப்பிட்ட பின்னரும், படுப்பதற்கு முன்னரும், "சிவசிவ" என்று சொல்லி அணிந்து நெற்றியிலும், கொப்பூழிலிருந்து கழுத்துவரையிலும், இரண்டு கைகளிலும் மணிக்கட்டிலிருந்து

தோள் வரையிலும், தண்ணீரில் குழைக்காமல் தூளாகவே யாவரும் அணிந்து கொள்ளலாம்.

தீட்டுக் கழிக்கும் சக்திவாய்ந்த திருநீற்றிற்குத் தீட்டு என்பது கிடையாது.

சிவதீட்சை பெற்றவர்கள் திருநீறு அணியவேண்டிய முறையையும், அணியவேண்டிய காலங்களையும், அவற்றிற்குரிய மந்திரங்களையும், அவரவரது குருமூலம் அறிந்து அதன்படி தண்ணீரில் குழைத்து அணிந்து கொள்ள வேண்டும். அவர்களும் மற்ற நேரங்களில் தூளாகவே மேலே சொன்னவாறு அணிந்து கொள்ளலாம். ●

பத்தியொடு சிவசிவா என்றுதிரு நீற்றைப்
பரிந்துகை யாலெடுத்துப்
பாரினில் விழாதபடி அண்ணாந்து செவியொடு
பருத்தபுய மீதுவீழ
நித்தமூ விரல்களால் நெற்றியில் அழுந்தலுற
நினைவாய்த் தரிப்பவர்க்கு
நீடுவினை யணுகாது தேகபரி சுத்தமாம்
நீங்காமல் நிமலனங்கே
சத்தியொடு நித்தம்வினை யாடுவன் முகத்திலே
தாண்டவம் செய்யும்திரு
சஞ்சலம் வராதுபர கதியுதவும் இவனையே
சக்தியும் சிவனு மெனலாம்
மத்தினிய மேருஎன வைத்(து)அமுதி னைக்கடையும்
மால்மருக ஞானமுருகா
மயிலேறி விளையாடு குகனேபுல் வயல்நீடு
மலைமேவு குமரேசனே.

---

## நல்ல செய்தி

சென்னைத் திருமயிலையிலுள்ள லஸ் சதுக்கத்தில் கோயில் கொண்டிருக்கும் ஸ்ரீ நவசக்தி விநாயகப் பெருமானுக்கு, நிகழும் ஆவணிமாதம் 7 உ முதல் 13உ வரையில், விநாயக சதுர்த்தி மஹோத்ஸவம் நடைபெறவிருக்கிறது. அவ்வமயம் அன்பர்கள் சென்று தரிசித்து. அங்கு அளிக்கப்படும் இன்னிசை விருந்துகளைக் கேட்டு இன்புறுவதோடு, தம்மால் இயன்ற பொருளுதவிகளையும் செய்து. ஸ்ரீ விநாயகப் பெருமானின் திருவருட் செல்வத்தைத் தேடிக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

# வித்தக ஞான சித்தர்

கலைமாமணி
ஸ்வாமி சரவணபவானந்தர்

பொன்றுப் புகழுடன் நின்று நிலவுகின்ற பெருமானுர் இராமலிங்க அடிகள் "இரண்டரைக் கடிகையில் வருவோம்" என்று சொன்ன வண்ணம்;

"கையற விலாது நடுக் கண் புருவப் பூட்டு
கண்டு களிகொண்டு திறந் துண்டுநடு நாட்டு
ஐயர்மிக உய்யும் வகை அப்பர் விளை யாட்டு
ஆடுவதென்றே மறைகள் பாடுவதும் பாட்டு"

என்றபடி;

நம்முடைய இரண்டு கண்களுக்கும் இடை நடுவாகிய, "அரை" என்னும் புருவ மத்தியஸ்தானத்தில், அறிவுக் கண்கொண்டு அருள் ஒளியைக் காண்கின்ற கடிகையளவில், அருட்பெருஞ்சோதி வடிவாய், வள்ளற் பெருமான் அந்தரங்க வருகை தந்துகொண்டிருக்கின்றூர்.

அவருடைய அருட் காட்சியினுல், பயன் பெற்றவர் பலருண்டு.

சுத்த தேகம் பெற்றவர் சுவாமிகள். பிரணவ தேகம் பெற்றவர் பெருமான். அழியா உடல் அமையப் பெற்றவர் அடிகளார். பொன்னுன மேனி பெற்ற புண்ணியவான்.

வள்ளலாரை இவ்வுலக மாத்திரமல்ல, மற்றெவ்வுலகும் போற்றிப் புகழ்கின்றது. பெருமானுடைய பேச்சினையே பேசிக்கொண்டிருக்கின்றது. ஆதாரம் வேண்டுமேயானுல், இதோ! அருட்பா இருக்கின்றது.

"சிற் சபையும் பொற்சபையும் சொந்தம் என தாச்சு!
தேவர்களும் மூவர்களும் பேசுவ தென் பேச்சு!
இச்சமய வாழ்வில் எனக் கென்ன யினி ஏச்சு!
என் பிறவித் துன்பமெலாம் இன்றேடே போச்சு!"

வள்ளலார் ஒரு பெருந் தபஸ்வி. சரதமான ஒரு விரத சீலர். கடினமான நோன்பு நோற்றவர். அதன் பயனுப் பேரருளைப் பெற்றுப் பெருமித மடைந்தவர். நோய்க் காட்டின் எல்லையிலுள்ள சாக்காட்டையும் கடந்தவர்.

"நோவாது நோன் பெனைப் போல்
நோற்றவரும் எஞ்ஞான்றும்

சாவா வரம் எனைப்போல்
சார்ந்தவரும்—தேவா! நின்
பேரருளை என்போலப்
பெற்றவரும் எவ்வுலகில்
யாருளர் நீ சற்றே அறை?"

என்று அவர் அழுத்தந் திருத்த மாகக் கேட்கின்றார்.

வள்ளலார், சிறந்த ஜீவ காருண்ய சீலர். நம்மை மாளா நிலைக்கு ஆளாக்க வல்லவர்.

"நம்பினவர்களைக் கைவிட மாட்டோம்!" என்று நவின்றவர்.

"நிச்சலும் பேரானந்த
நித்திரை செய்கின்றேன்!"

என்று இறுதியுரை வழங்கியவர்.

"எங்கும் நிறைந்திருப்போம்! ஆனால், இறைவன் நம்மைக் காட்டிக் கொடுக்கமாட்டான்" என்று உள்ளதை உள்ளபடி உரைத்தவர்.

வள்ளலார் ஓர் அற்புதமான அவதார புருஷராய் வந்தவர். பெரிய தீர்க்கதரிசியாய் வாழ்ந்தவர். வியக்கத்தக்க சித்த புருஷராய் விளங்கியவர். பழுத்த ஞானப் பழமாய்ப் பரிமளித்தவர். இன்றும் பரிமளிப்பவர்.

அவர் பூமியில் நடந்தார்; ஆனால், அவரது பாதம் மண்ணில் பதியவில்லை.

நின்றார்; நிழல் கீழேவிழவில்லை. சோதித்துப் பார்த்தனர். ஏன்? அவர் உடலைச் சேதித்தும் பார்த்தனர். ஆனால், எதனாலும் அவர் பாதிக்கப்படவில்லை!

"காற்றாலே புவியாலே ககன
மதனாலே
கனலாலே புனலாலே கதி
ராதியாலே

கூற்றாலே பிணியாலே கொலைக்
கருவியாலே
கோளாலே பிறர் இயற்றும்
கொடும் செயல்களாலே

வேற்றாலே எஞ்ஞான்றும் அழி
யாதே விளங்கும்
மெய் அளிக்க வேண்டுமென்
றேன் விரைந்தளித்தான்

எனக்கே! ஏற்றாலே இழிவென
நீர் நினையாதீர் உலகீர்
எந்தையருட் பெருஞ்சோதி
இறைவனைச் சார்வீரே!

என்பது அவர் தம்மைப்பற்றித் தாமே கூறுகிற அனுபவ உண்மை.

தான் பெற்ற அருள் நெறியை, வள்ளலார் எல்லோருக்கும் தாராளமாக வாரி வழங்குகின்றார்.

மக்கள் தக்க முறையில் வாழ்வாங்கு வாழவேண்டிய வழியைச் சொல்லுகின்றார். வேண்டுவார்க்கு வேண்டும் நலமெல்லாம் இன்றைக்கும் தோன்றாத் துணையாய் நின்று செய்து கொண்டிருக்கின்றார்.

சமரசத்தை அடிப்படையாகக் கொண்டு, அருள் நெறியில் நின்று நவரசமும் சொட்டச் சொட்டப் பாடியுள்ளார் வள்ளலார்.

பாண்டி நாட்டில், பக்தன் பாண பத்திரனுக்காக, கலைவடி வான கடவுள், தன் தலையில் விறகு சுமந்து வந்தான். சரியான வெய் யில். சூடு தாள முடியாமல் தத்த ளிக்கின்றான்.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே நிகழ்ந்த இந்த அற்புத நிகழ்ச்சியை, இன்று நேரில் பார்க் கின்றார் வள்ளலார். உள்ளம் பதைக்கின்றார். உருகிப் பாடுகின் றார்.

அந்த குழைந்த மனம் கூறுகின் றது:

''சேர்க்கின்ற கூடலில் பாணனுக்
காட்படச்
சென்ற அந்நாள்
வேர்க்கின்ற வெம்மணல் என்
தலைமேல் வைக்கும்
மெல்லடிகருப்
பேர்க்கின்ற தோறும் உருத்திய
தோ எனப்
பேசி எண்ணிப்
பார்க்கின்ற தோறும் என்
கணணே! என் உள்ளம்
பதைக்கின்றதே!''

இப்படிக் கருணை ததும்பப் பாடிய அவர், பின்னே ஒரு பாட் டில் வீரம் பேசுவதைப் பாருங் கள்;

''படமாட்டேன் துயர் சிறிதும்
படமாட்டேன் இனி நான்
பயப்படவும் மாட்டேன் உன்
பதத்துணையை பிடித்தேன்
விடமாட்டேன் ஏமாந்து
விடமாட்டேன் கண்டீர்
மெய்மை இது நும் ஆணை
விளம்பினன் நும் அடியேன்
கெடமாட்டேன் பிற
மொழிகள்
கேட்டிடவும் மாட்டேன்
கிளர் ஒளி அம் பலத்தாடன்
வளர் ஒளி நும் அல்லால்
நடமாட்டேன் என் உளத்தே
நான் சாக மாட்டேன்
நல்ல திரு அருளாலே
நான் தான் ஆனேனே!''

○

---

## நல்ல செய்தி

புதுக்கோட்டை ஸ்ரீ சத்குரு ஸதாசிவப் பிரம்மேந்திர சரஸ் வதயவதூத ஸ்வாமிகளின் அதிஷ்டானத்தில், ஸ்ரீஸ்வாமிகளின் ஜயந்தி மஹோத்ஸவத்தை முன்னிட்டு, அவர்களது ப்ரசிஷ்யா ளான ஸ்ரீசத்குரு சாந்தானந்தஸ்வாமிகள், 4-6-71 முதல் 1-7-71 வரையிலான 28 நாட்களில் ஸ்ரீசரப மஹாமந்திரத்தா லான லக்ஷஹோமம் ஒன்றை மிகவும் விமரிசையாகச் செய்து முடித்துள்ளார்கள்.

ஏராளமான சாதுக்களும் பக்தர்களும் வந்து இந்த ஹோமத் தை தரிசித்து, ஸ்ரீசரபமூர்த்தியின் திருவருளுக்குப் பாத்திரானார் கள். எல்லாவற்றையும் விட, ஸ்ரீ நரசிம்ம மூர்த்தியின் உக்ரத் தைத்தணித்து உலகைக் காப்பாற்றிய பரமகருணாமூர்த்தியான ஸ்ரீசரபேஸ்வரரைப் பற்றி, வித்வான்களல்லாத சாமான்ய மக்களும் தெரிந்து பக்தி செலுத்துவதற்கு, இந்த லக்ஷஹோமம் ஓர் அரிய வாய்ப்பினை அளிப்பதாயிருந்த தென்பது குறிப்பிடத் தக்கது.

# வெற்றிக்கு வழி

ஸ்ரீ வி. ஜி. பன்னீர்தாஸ்



நான் ஒரு வியாபாரி.

வியாபாரத்தின் மூலம் நிறையப் பொருள் ஈட்டியவன்; ஈட்டிக் கொண்டிருப்பவன்; ஈட்டப்போகிறவன். எனவே, நான் ஒரு வெற்றிகரமான வியாபாரி.

இந்நாளில், வியாபாரத் தொழிலைப் பற்றி, வியாபாரிகளிடையேயும் மக்களிடையேயும், ஒரு தவருன கருத்து நிலவுகிறது.

அதாவது, நேர்மையான முறையில் வியாபாரம் செய்தால், அத் துறையில் அவ்வளவாக வெற்றியடைய முடியாது என்று நம்மில் பெரும்பாலோர் கருதுகிருர்கள்.

நேர்மையற்ற வழிகளைக் கையாண்டால்தான், வியாபாரத் துறையில் நிறையப் பணம் சம்பாதிக்க முடியும் என்பது, பல வியாபாரிகளுடைய கொளகை.

இந்தக் கொள்கை எவ்வளவு தவருனது என்பதை, இறைவன் அவர்களுக்கு அனுபவ வாயிலாக உணர்த்தினல்கூட, அவர்களால் உணர்ந்து கொள்ள முடிவதில்லை. அதுதான் மிகவும் பரிதாபத்துக்கு உரிய விஷயம்.

நேர்மையற்ற வழிகளைக் கையாள்வதனுல், வியாபாரத்தில் நிறையப் பணம் கிடைக்கலாம். ஆனல் அந்தப் பணம் நிலைக்க மாட்டாது. ஏதோ ஒரு வகையில் வீணே விரயமாகிவிடும்!

பணம் விரயமாகாமல் இருந்தால், அதை அனுபவிக்க முடியாதபடி உடலுக்கு ஏதேனும் நோய் வந்துவிடும். எவ்வளவு பணம் செலவு செய்தாலும், அது எளிதில் தீரக்கூடிய நோயாக இராது!

உடல் அவ்வாறு நோய்வாய்ப் படாமல் இருக்குமானுல், உள்ளம் நோய்வாய்ப்படும். சூழ்நிலேயில் அமைதியிராது. பெரும்பாலும் வெளியே சொல்ல முடியாத அச்சங்களாலும் கவலேகளாலும் அவமானங்களாலும், உள்ளம் எந்நேரம் பார்த்தாலும் வேதனேயால் புழுங்கிக் கொண்டிருக்கும்.

இந்த நிலேயில் அந்த வியாபாரிக்கு எத்தனே கோடி ரூபாய் ஆதாயம் வந்தாலும், அதனுல் அவருக்கு ஆகக்கூடிய பயன் என்ன? யாதுமே இல்லே!

ஆதாயம் சொற்பமாக இருந்தாலும், அது நேர்மையான வியாபார முறைகளினுல் வந்த ஆதாயமாயிருந்தால், அதை அனுபவிப்பதற்கு உடலில் ஆரோக்கியம் இருக்கும். மனத்தில் அமைதி இருக்கும்; ஆனந்தம் இருக்கும்.

வியாபாரத்தில் நிறைய ஆதாயத்தைப் பெறவேண்டுமானுல், அதற்கும் ஒரு நேர்மையான வழி இருக்கிறது.

அதாவது,—

"நாம் இலாபம் சம்பாதிப்பதற்காகவே இந்த வியாபாரத்தைச் செய்கிறேம்!" என்ற மனப்பான்மையை விடுத்து;

"மக்களுடைய தேவைகளேப் பூர்த்தி செய்வதற்காகவே நாம் வியாபாரம் செய்கிறேம்" என்ற மனப்பான்மையை மேற்கொள்ள வேண்டும்.

அப்போது, மக்களுக்கு சேவை செய்வதே நம் வியாபாரத் தொழிலின் குறிக்கோள் ஆகிவிடுகிறது.

அந்த சேவையை நாம் எவ்வளவுக் கெவ்வளவு ஆர்வத்தோடு செய்கிறேமோ, அவ்வளவுக் கவ்வளவு நம்முடைய ஆக்கம் (அதாவது, செல்வம்) பெருகும்!

அந்தச் செல்வமானது, எக்காலத்திலும் வீண் விரயங்களுக்கு உள்ளாக மாட்டாது. அது நம் உடலுக்கு நோயை உண்டாக்காது. உள்ளத்துக்கும் துன்பத்தைத் தராது!

எனவே, எல்லாம் நம்முடைய மனப்பான்மையில்தான் இருக்கிறது.

சேவை மனப்பான்மையே செல்வத்தைப் பெருக்குவதற்கான சிறந்த வழி.

இந்த அடிப்படை உண்மையை அறிந்தவர்கள், தம் வியாபாரத்தில் எந்த ஒரு நேர்மையற்ற வழியையும் கடைப்பிடிக்க மாட்டார்கள்.

நேர்மையான வழிகளே கையாண்டே, அவர்கள் வெற்றிகரமான வியாபாரிகளாக விளங்குவார்கள்.

# ஸ்ரீ சாந்தானந்தர்

## அருள்வாக்கு



ஆசை விவேகத்தைக் கெடுத்து விடுகிறது.

ஆசையுள்ளவன் பாவங்களில் சிக்கிக்கொள்கிறான்.

காமமே கொடிய உட்பகை யாகும்.

கோபம் கொடிய நரகத்தில் தள்ளிவிடும்.

ஆசைதான் பாபத்தைச் செய்ய வைக்கிறது.

சுகபோகத்தில் மூழ்கிவிட் டவன் கடமைகளை மறந்து விடுவான்.

அதைரியம் மனித சமூகத் திற்கே முதல் சத்ருவாகும்,

கர்வப்படுபவன் தன்னைத் தானே கெடுத்துக் கொள்கிறான்.

கவலை அதைரியத்தை உண் டாக்கும்,

சோகம் தைரியத்தை அழிக் கும்.

குருவையும் தெய்வத்தையும் அவமதித்தவன் சண்டாளனு வான்.

கோபத்தால் புத்தி மழுங்கிப் போகும்.

கோபத்திற்கு வசப்பட்டவன் முடிவில் நாசமடைவான்.

அழிந்து போகவேண்டிய காலத்தில், நல்ல யோசனைகள் விஷமாகத் தோன்றும்.

கடவுளைச் சரணமடைந்தவனின் பாபங்கள், வெந்து சாம்பலாகி விடுகின்றன.

நீ செய்த கொடிய பாவத்திற்குப் பிராயச்சித்தம், சரணாகதி ஒன்றேதான்.

அலக்ஷ்ய புத்தியுள்ளவன் அழிந்து போவான்.

தன்னைத்தானே பெரிய மனிதனாக நினைத்துத் தவிப்பவன், முட்டாள்களின் தலைவனாகிறான்.

எவரையும் நிந்திக்காதே; பிறர் மனம் வேதனையுறும்படிபேசாதே; தனத்தால் திமிர்பிடித்து அலையாதே; மறைவிலும் பாபம் செய்யாதே; பேராசையும், கர்வமும் உன்னை உயிருடன் வதைக்கும்; ஜாக்ரதை.

நாணமற்ற பெண், மணமற்ற மருலக்கு ஒப்பாவாள்.

பிரம்மசர்ய நியமம், அபார மனோ பலத்தை உண்டாக்கும்.

கற்புநிலை நிற்போருக்கு, தீர்க்க தரிசனம் உண்டாகும்,

உயிரேபோகும் நிலையிலும், நீ நேர்மையுடன் நிற்பாயாக!

கோழைகளே பாவம் செய்வார்கள்.

வாழ்க்கை என்பது சாசுவதமானதன்று; அது ஓடிமறையும் கனவாகும்.

இளமையும் அழகும் நிமிஷ நேரத்தில் வாடி வதங்கிப்போகுமென்பதை மறவாதே.

மனிதனைக் கடவுளாக உயர்த்துவதே சமயங்களின் குறிக்கோள்.

உண்மைக்காக எதையும் நீ துறக்கலாம், ஆனால்எதற்காகவும் உண்மையை துறக்கலாகாதென்பதை மறந்துவிடாதே!

புகழை விரும்புபவன் தீமை செய்யத் துணிந்து விடுவதும் உண்டு.

ஓர் உண்மையான சிஷ்யனோ, பக்தனோ, தாசனோ, வீரனோ, வாய்பேசாது பணிபுரிந்து வருவான்,

மனிதனை அடியோடு பாழ்படுத்துவது தீயோரின் சேர்க்கையேயாகும்.

முன்கோபம் சாந்தியைக் கெடுத்துவிடும்.

டாம்பீகமற்றவனே நன்கு கைங்கர்யம் செய்வான்.

கோபக்காரன் ஆரோக்கியதை இழந்து அல்லல்படுவான்.

○

# தெய்விக வாழ்க்கை

ஸ்ரீ ஸ்வாமி சிதானந்தா

நல்ல காரியம் செய்வதிலே; பிறருக்குச் சேவை செய்வது, ஜபம், தானம் போன்ற சத்காரியங்களிலே; எப்போதும் மிகச் சுறுசுறுப்பாக இருக்கவேண்டும்.

ஒரு நிமிடம் போனாலும் மீண்டும் திரும்பிவராது. நேரம் என்பது விலைமதிப்பற்ற அரிய வஸ்து. பொழுது விடிந்ததிலிருந்து பொழுது மறைவதற்குள், எவ்வளவு சத்காரியம் செய்யலாம் பிறருக்கு என்ன சேவை செய்யலாம், எவ்வளவு நன்மை செய்யலாம் என்ற எண்ணத்திலேயே, நாளைத்துவக்க வேண்டும். பகவான்கொடுத்த புதிய தினத்தைப் பொன் நாளாக ஆக்கவேண்டும்.

ஆயுள் எப்படிப் போகும், எப்போது போகும் என்பது நமக்குத் தெரியாது. இன்றைக்கு இருப்பது நாளைக்கு எப்படியோ! நல்ல எண்ணம் வந்தால், உடனே அதன்படி செய்து விடவேண்டும். சத்காரியத்தை நாளைக்குச் செய்யலாம் என்று தள்ளிப் போடக் கூடாது.

வாயிலிருந்து வந்த பேச்சைத் திருப்பிப் பெறமுடியாது.

வில்லிலிருந்து விட்ட அம்பை மீட்க முடியாது.

போன நேரம் திரும்பி வராது.

வாயில் வரும் பேச்சு, பிறருக்கு உதவியாக, நன்மையளிப்பதாக இருக்க வேண்டும், வாயில்வரும் வாக்கு பிறருக்கு இதமாக இனிமையாக இருக்க வேண்டும். அதனால் தான் குருதேவ் சிவானந்தர், 'விசாரித்துப்பேசுக' ('Think before you speak') என்கிறார்.

ஆயுள், அதாவது இந்தப் பிறவி, நமக்கு பகவான் கொடுத்த வரப் பிரசாதம்.

நாம் பகவானிடமிருந்து வந்தவர்கள். நாம் பகவானுடைய திவ்ய புத்திரர்கள். பகவானே நமக்கு மாதா, பிதா, குரு, தெய்வம் ஆகின்றார்.

நாம் பேரானந்தம் அடைவதற்காக, பகவான் இந்த மானிட ஜன்மம் கொடுத்திருக்கிறார். தேவாதி தேவர்களுக்கும் இம்மாதிரி சந்தர்ப்பம் கிடையாது. வீண் பேச்சு முதலியவற்றில்

காலத்தை வீணாக்கி விட்டால், பின் வருந்த நேரிடும்.

பெரியவர் ஒருவர் சொன்னார்: "நண்பர்களே நமது மிகப் பெரிய எதிரிகள். ஏனென்றால் ஒரு நண்பன் வீண்பேச்சுப் பேசி ஒரு மணி நேரத்தை வீணாக்கி விட்டான். அதாவது அறுபது 'வைர' நிமிடங்கள் கொண்ட ஒரு 'தங்க' மணியை வீண் பேக்கி விட்டான்."

நேரம் போனால் ஆயுளும் போகும். கிடைத்த நேரத்தைச் சரியாகப் பயன் படுத்தாவிட்டால், பின் எமன் வரும்போது ஒரு நிமிஷம்கூடவிடமாட்டான்.

தெய்வீக காரியத்தில், சன்மார்க்கத்தில், "நேற்று இருந்தது போல் இன்று இருக்கக்கூடாது, இப்போது இருப்பது போல் நாளைக்கு இருக்கக்கூடாது." என்ற அதிருப்தி இருக்க வேண்டும். சத்காரியம், பஜனை, ஜபம், தியானம் முதலியன, லட்சியம் அடையும்வரை நடைபெற்றுக் கொண்டே இருக்கவேண்டும்.

எல்லோரும் ஆனந்தத்தை விரும்புகிறார். ரவாகேசரி செய்ய வேண்டுமென்றால், எல்லாம் செய்து விட்டு, இனிப்புப் போடாவிட்டால் சுவையாயிருக்காது. எல்லாம் செய்து அதில் இனிப்பும் போட்டிருந்தால். அது நமக்கும் இனிப்பாக இருக்கிறது.

அதுபோல, எவனுக்கு ஆனந்தம் ஏற்படுகிறது என்றால், பிறருக்கு எவன் ஆனந்தத்தைக் கொடுக்கிறானோ, அவனுக்குத் தான் ஆனந்தம் கிடைக்கிறது. பிறருக்கு எந்த அளவு சுகம் கொடுக்கிறோமோ, அந்த அளவு சுகந்தான் நமக்கும் கிடைக்கும்.

பகவான் எல்லோரிடத்தும் வீற்றிருக்கிறார். கோயில் வழிபாடு செய்துவிட்டு மற்றவர்களுக்குத் துக்கத்தைக் கொடுத்தால், துக்கமே நமக்கும் கிடைக்கும். பிறருக்குத் துன்பத்தைக் கொடுத்தால், அதுவே பகவானுக்கும் கொடுத்ததாகும். ஏனென்றால், பகவான் எல்லோரிடத்திலும் இருக்கிறார்.

உங்கள் வாழ்க்கையில் நீங்கள் பிறருக்குச் சுகத்தைக் கொடுத்து, நீங்களும் சுகத்தை அடைய வேண்டும். ஒவ்வொரு நாளும் இந்த மாதிரி வாழ்ந்து வந்தால், ஆனந்தம், சாந்தி, பகவத் சாட்சாத்காரம் எல்லாம் கிடைக்கும்.

நீங்கள் எல்லோரும் விவேகிகளாய், பரோபகாரிகளாய், தெய்வீக வாழ்க்கை வாழ்ந்து, பிரம்மானந்தத்தை இந்த ஜன்மத்திலேயே, இந்தச் சரீரத்திலேயே அடையவேண்டும் என்பதே, இந்தச் சிவானந்தத் தொண்டனின் விண்ணப்பம்.

ஹரி ஓம் ! ஜெய் சிவானந்தா!



# ஆழ்ந்த உறக்கமும் ஆத்ம சுகமும்



வேதவேதாந்த
வித்வரத்னம்
பிரம்மஸ்ரீ
ஆர். முத்துகிருஷ்ண
சாஸ்திரிகள்

ஸுஷுப்தி காலத்திலேயே ஆத்மானந்தம் பிரகாசிக்கின்றது. இந் நிலைக்குத்தான் ஆனந்த மயகோசம் என்று பெயர்.

இந்நிலையில் ஜீவன் இருக்கையில், மிகச் சிறந்த சுகத்தை அனுபவிக்கின்ருன்.

மற்ற எல்லா இந்திரியங்களும் அக்காலத்தில் லயத்தை அடைந்திருக்கின்றபடியால், ஜீவன் வேறு எந்த விஷயத்தையும் அனுபவிப்பதில்லை. அக்காலத்தில் ஆத்மஸ்வரூபம் ஒன்றே பிரகாசித்துக் கொண்டிருக்கிறது.

உலகில் உள்ள மற்ற எல்லா சுகங்களைக் காட்டிலும், ஆத்ம சுகமே மிகச் சிறந்தது. ஏனென்ருல் எந்தவித விஷய சுகத்தை அனுபவிப்பதற்காகத் தூக்கத்திலிருப்பவன் எழுப்பப்பட்டாலும், அவன் மிகவும் வருந்துகிருன். ஆதலால் மற்ற எல்லா சுகங்களைக் காட்டிலும், சுஷுப்தியில் அனுபவிக்கப்படும் ஆத்ம சுகம் மிகச் சிறந்தது என சித்திக்கின்

றது. ஆதலால்தான், தூங்கிக் கொண்டிருப்பவனை எழுப்பக் கூடாது என சாஸ்திரம் தடை செய்கிறது.

சுஷுப்தி காலத்தில் எல்லா ஜீவர்களும், ஏழை பணக்காரன், ஈ, எறும்பு முதலிய பாகுபாடின்றி சிறந்த சுகத்தை அனுபவிக்கின்றனர். ஆனால் அந்த சுஷுப்தியை விட்டு ஜாக்கிரத்திற்கு வந்தால், வழக்கம்போல் அவரவர்களுடைய சுகதுக்கங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது.

பிரஹ்மஸ்வரூபத்தை அறிந்துவிட்டால், இடைவிடாமல் ஒரே சுகத்தையே அனுபவிக்கலாம். துக்க சம்பந்தமென்பதே இராது.

இதை அறியாத பலர், வயிற்றை வளர்ப்பதற்கென்றே கண், காது முதலிய இந்திரியங்களுக்கு வசமாகி, பல பாவங்களைச் செய்து, அடிக்கடி சோகத்தையும், துக்கத்தையும் அனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். அவ்விதம் செய்யாமல், ஆத்மஸாக்ஷாத்காரத்திற்கே முயல வேண்டும்.

விஷய சுகங்களைக் காட்டிலும் ஆத்மானந்தம் மிகச் சிறந்தது. ஏனென்றால், ஜாக்ரத் காலத்தில் விஷய சுகங்களை அனுவிப்பதன் பொருட்டு, மனிதன் பலவித முயற்சிகளைச் செய்கின்றான். கடைசியில் ஏதோ ஒருவிதமாக அந்த சுகத்தை அடைந்தபோதிலும், இந்திரியங்கள் எல்லாம் சோர்வடைந்து, அடைந்த சுகத்தைக்கூட மறந்து, களைப்பாறுவதற்காக தூக்கத்தை நாடுகிறான்.

ஏன்? விஷய சுகத்தைக் காட்டிலும் சுஷுப்தி காலத்தில் அனுபவிக்கப்படும் ஆத்மசுகம் மிகச் சிறந்ததாக இருப்பதால்தான்!

மேலும், விஷய சுகங்களைப் பெற ஏராள கஷ்டங்களை அனுபவிக்கவேண்டும். ஆத்ம சுகத்திற்கு அவ்வளவு தேவையில்லை. இந்திரிய விஷய சம்பந்தத்தால் ஏற்படும் சுகம், முடிவில் துக்கத்தையே அளிக்கக் கூடியது. ஆத்ம சுகம் அப்படிப்பட்டதல்ல. ஆதலால், எல்லா விதத்திலும் ஆத்ம சுகமே மிகச் சிறந்தது.

ஒரு பறவை, அதன் இரு இறக்கைகளையும் அடித்துக்கொண்டு, காற்றை உண்டாக்குகின்றது. அதனால் ஆகாயத்தில் மிக உயர்ந்த இடத்தை அடைகின்றது. அங்கு இன்னும் அதிகமான காற்றைப் பெற்று, இரு இறக்கைகளையும் பரப்பிக்கொண்டு, களைப்பைத் தீர்த்துக்கொள்ளுகிறது.

அதுபோல், இந்த மனது விஷய சுகத்தை அனுபவிக்கப் பலவித கெட்ட சங்கல்பங்களையும் விகல்பங்களையும் செய்து, பலவித ஏமாற்றங்களையடைந்து, துன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கிறது. அவ்வித துன்பங்கள் நீங்கிக் களைப்பாறுவதன் பொருட்டுத்தான், கைகால்களை பரப்பிக்கொண்டு வெகு நேரம்

வரை பிராணிகள் தூங்குகின்றன.

இதிலிருந்து, விஷய சுகத்தைக் காட்டிலும் சுஷுப்தி காலத்தில் அனுபவிக்கப்படும் ஆத்மசுகம் மிகச் சிறந்தது என்பது உறுதியாகிறது.

பலகாலம் அயலூரிலிருந்த காமியான ஒரு மனிதன், தன் வீட்டிற்குத் திரும்பி வந்ததும், மனத்திற்கிசைந்த மனைவியை இறுக ஆலிங்கனம் செய்து கொண்டு சுகத்தை அநுபவிக்கையில் எவ்விதம் வேறு எதையும் அறிவதில்லையோ;

அது போல், ஜீவன் சுஷுப்தி காலத்தில் பரமாத்மாவை இறுக ஆலிங்கனம் செய்து கொண்டு, (அதாவது, பரமாத்மாவுடன் ஒன்ருகி,) உள்ளேயோ வெளியிலேயோ உள்ள எவ்விஷயத்தையும் அறிவதில்லை.

மேலும், அக்காலத்தில் எல்லாவித உலகவியவஹாரம், புண்யபாவசம்பந்தம், சோகம், மோஹம், பயம், வேண்டியது, வேண்டாதது எதையுமே ஜீவன் நினைப்பதில்லை. ஆத்மஸுகம் ஒன்றையே அவன் அனுபவிக்கிருன்.

சுஷுப்தியில் உள்ளவனுக்குக் கர்ம வாஸனைகள் அழியாததால், அந்த வாஸனை வசத்தால் மறுபடியும் அவன் பிரபஞ்சத்திலேயே ஈடுபட்டுவிடுகிருன். ஜீவன் முக்தனேவெனில், அவனிடமிருந்த கர்ம வாஸனைகள் எல்லாம் ஆத்மஞானத்தால் அழிந்துவிட்டபடியால், மறுபடியும் பிரபஞ்சத்திற்குத் திரும்புவதில்லை.

சாதாரண மனிதர்கள் சிற்சில விஷயங்களை மட்டும் பெற்று, சிற்சில சுகங்களை மட்டும் அனுபவிப்பர். எல்லா ஐச்வர்யங்களையும் அடைந்த அரசன், எல்லா மனுஷ்ய ஆனந்தங்களையும் சேர்த்து அனுபவிப்பான். அது அரசனின் ஓர் ஆனந்தமாகும்.

அதைப்போல் நூறு மடங்கு கொண்ட ஆனந்தம், பித்ருக்களுக்கு ஓர் ஆனந்தமாகும்.

அதற்குமேல் தேவலோகம் முதல் பிரஹ்மலோகம் வரை, ஆனந்தம் நூறு நூறு மடங்கு அதிகரித்துக்கொண்டே வரும்.

இவையெல்லாம் சேர்ந்தது ஒரு பிரஹ்மானந்தமாகும். மற்ற எல்லா விஷய சுகங்களும், இந்த பிரஹ்மானந்தத்தின் அம்சமே ஆகும். ஆதலால் மற்ற எல்லா ஆனந்தங்களையும்விட, பிரஹ்மானந்தமே மிகவும் சிறந்தது. இது, தைத்திரீயோபனிஷத் ஆனந்த வல்லியிலுள்ள ஆனந்த மீமாம்ஸா என்ற பிரகரணத்தில் கூறப்பட்டிருக்கிறது.

ஒவ்வொருவருடைய ஆனந்தத்திற்கும் ஒவ்வொரு பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது மனுஷ்யானந்தம் "ஆனந்தம்." பித்ருக்களுடைய ஆனந்தம் "முதம்." தேவர்களுடைய ஆனந்தம் "ப்ரமுதம்." இவையெல்லாம் ஆத்மானந்தத்தில் அடங்கியிருக்கின்றன,

ஸத்யலோகம் முதலியவற்றில் பெறக்கூடிய சுகம், இந்த பிரஹ்மானந்தத்திலேயே இருக்கின்றது. அப்படிப்பட்ட ஆனந்தத்தில் எப்பொழுதும் ஜீவர்களாகிய நாம் லயித்திருக்க வேண்டும்.

"ஆத்மா இந்திரியங்களுக்குப் புலப்படாதது. விஷய சுகம் இந்திரியங்களால் ஏற்படக் கூடியது. அப்படியிருக்க விஷய சுகம் ஆதமானந்தத்தின் அம்சம் என்று கூறப்பட்டது எப்படி பொருந்தும்?" என்று கேட்கிறீர்களா?

அசைவற்றிருத்தல், சுகம், இவையிரண்டும் ஆத்மதர்மம். சலித்தல், துக்கம் இவையிரண்டும அனாத்மாவான மாயையின் தர்மம். மனத்தில் இரண்டு தர்மங்களும் பிரதிபலிப்பதால், மனத்தை 'சிதசித்க்ரந்தி' எனக் கூறுவர்.

விரும்பிய பொருள் கிடைக்கும் வரை மனத்தில் அனாத்ம தர்மமான சலனமே பிரதிபலிப்பதால், துக்கத்தையே அளித்துவருகின்றது.

விரும்பிய பொருள் கிட்டிய பின், ஆத்ம தர்மமான "ஸ்தைர்யம்" (அசைவற்றிருத்தல்) மனதில் பிரதிபலிக்கின்றது. அப்பொழுதுதான் விஷயானந்தம் அனுபவிக்கப்படுகின்றது.

எவ்வளவு நேரம்வரை ஸ்தைர்யம் மனத்தில் பிரதிபலித்துக் கொண்டிருக்கிறதோ, அவ்வளவு நேரம் வரைதான் விஷயானந்தம் அனுபவிக்கப்படும். ஆதலால், மனத்தில் பிரதிபலிக்கும் ஆத்ம தர்மமே விஷயானந்தம் எனப் பேசப்படுகிறது. எனவே விஷயானந்தமும் ஆத்மானந்தத்தின் அம்சம் என்பது பொருத்தமானதே.

சிருங்காரரஸாநுபவ காலத்தில், மனது அசைவற்றிருக்கையில் ஒரு நிமிஷம் சௌக்கியம் ஏற்படுகின்றது.

அவ்விதமே சுஷுப்தி காலத்திலும் மனது அசைவற்றிருக்கும் வரை சிறநத சுகம் உண்டாகின்றது.

முக்திக் காலத்திலும், மனது முற்றிலும் சாந்தமாக இருக்கும் காரணத்தால்தான் நித்யானந்தம் அனுபவிக்கப்படுகின்றது.

ஆதலால், சுகம், மனத்தின் அசைவற்ற தன்மை, இவ்விரண்டும் எப்பொழுதும் சேர்ந்தே இருக்கும் என்பது சித்திக்கின்றது. ஆக, எக்காலத்தில் மனத்தில் ஆத்மதர்மமான ஸ்தைர்யம், (அதாவது, அசைவற்றிருத்தல்) என்பது ப்ரதிபலிக்கின்றதோ, அப்பொழுதுதான் விஷய சுகாநுபவம் ஏற்படுகின்றது என்ற காரணத்தால், "விஷயசுகம் ஆத்மானந்தத்தின் அம்சம்" எனக் கூறப்படுவது மிகவும் பொருத்தமானதே.

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T. ராமனுஜன் 4, தணிகாசலம் செட்டிரோடு, சென்னை-17. அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஸார், தியாகராயநகர், சென்னை-17.